



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# அருட்சட்டத் திருவிளக்கு



ஆசிரியர்:

**K. சாம்பசிவ ஐயர்**



வெளியிடுவோர்:

**ஸ்ரீ அருட்சக்தி அன்னை ஆசிரமம்**

பிள்ளையார்குப்பம்

(வழி) பாகூர், கடலூர்-R.M.S.

1985 விலை 3—00





ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# அருட்சட்டத் திருவிளக்கு



*வெளியிடுவோர் :*

**ஸ்ரீ அருட்சக்தி அன்னை ஆசிரமம்**

பிள்ளையார் குப்பம் & அஞ்சல்

(வழி) பாகூர்-607402, கடலூர் R.M.S.



*எழுதியவர் :*

**K. சாம்பசிவ அய்யர்**

1985 விலை : ரூ. 8-00

முதல் பதிப்பு பிரதிகள் 1000

## இந்நூல் கிடைக்குமிடங்கள்

ஸ்ரீ அருள் சக்தி அன்னை ஆசிரமம்
பிள்ளையார் குப்பம் & அஞ்சல்
பாகூர் வழி-607402
கடலூர் R.M.S.

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருக்கோயில்
இரெட்டியப்பட்டி
நாகலாபுரம் P.O.-627904
நெல்லை மாவட்டம்

சு. மங்கையர்க்கரசி அம்மையார்
11-B, நிமந்தகார ஒற்றைவாடை வீதி
பெரியகாஞ்சிபுரம்-631502

K. S. கிருஷ்ணமூர்த்தி
ஸ்ரீ அருள்சக்தி அன்னை இல்லம்
41, பிஞ்சாலசுப்பிரமணியம் தெரு
(பனகல் பார்க் சமீபம்)
தி. நகர், சென்னை-17

P. R. வரதராஜுலு ராஜு
லட்சுமி நாராயணபுர அக்ரஹாரம்
(டவுன் ஹைஸ்கூல் வடபுறம்)
கும்பகோணம்-612001

---

மூவேந்தர் அச்சகம், இராயப்பேட்டை, சென்னை-14



உலகத்தை உய்விக்க வந்த உத்தமர்
ஸ்ரீ இரெட்டியபட்டி சுவாமிகள்



அருளமுதூட்டும்
ஸ்ரீ அருட்சக்தி அன்னை



## துதிப் பாடல்கள்

### பரிபூர்ண விநாயகர் துதி

ஐந்து கரத்தாய் அறுமுகற்கு நேர்மூத்தாய்
முந்த உதித்த முதல்வா என்—சிந்தை
குடியிருந்தே காக்கும் கோமான் உனையான்
அடிதொழுதேன் வந்தென்னை யாள்

நீயே துணையாகி நின்மலமாய் நிர்க்குணனுய்த்
தாயாகித் தந்தையாய்ச் சற்குருவாய்ச்—சேய்போல்
கருதிஎனை யாண்ட கணபதியே அல்லால்
வருவதியார் சொல்வாய் வழி.

உலகில் பெரியோராம் உத்தமரைக் காண
நலமுள் தெரியாத நாயேன்—கலைபலவும்
உற்றுணர்ந்தார் வாசல் ஒருக்காலும் சென்றறியாச்
சிற்றறிவேன் நன்மைபெறச் சேர்

இராசவிருட் சம்சிவமாய் இன்வேம்பு சத்தியதாய்
ஆசையுடன் வந்தே அமைந்து வெகு—நேசமுடன்
புத்திரனைப் பெற்றார்இப் பூதலத்தில் எல்லோரும்
முத்திபெற என்றே முதல்.

மதுரா புரிவடக்காய் வைகைநதித் தென்பால்
சதுரார் ரயில்பாலந் தன்மேற்காய் எங்கும்
கதித்தோங்கும் செங்நெல்சூழ் கட்டிடத்தின் கீழ்பால்
உதித்தாய்என் உள்ளத் துறை.

வினையகற்றும் பெருமான்இவ் வேளைவந்து
காத்தருள்வாய் விமல மூர்த்தி
உனையல்லால் வேறுதுணை உண்டோஇவ்
வுலகத்தில் ஒருவர் இல்லை
மனமுழன்று சுழல்கின்றேன் மாயவலைச்
குட்சிக்கி மதிம யங்கி
தினமும்யான் அலைவேனே சகிக்க வொண்ணு(து)
உனக்கபயம் செப்பு வாயே.

நாடுவோர்க் கெல்லாம் நாடிய படியே
நல்வரம் கொடுக்கும்நல் லீசன்
பாடுவோர் தமக்குப் பாடுதற் கிசைந்த
பயன்களை அளிக்கும்நற் பதத்தோன்
ஆடுவோர் கூத்தை அறிகின்ற சீலன்
அன்பர்தம் சிந்தையில் புகுந்து
கூடியே உறவாய் வழியது காட்டிக்
குணங்களை உரைக்கும்மெய்க் குருவே.

சீலமிகு செகதீசன் பெற்ற கண்ணே
தெவிட்டாத தெள்ளமுதே தேனே செந்தில்
வேலவர்க்கு முன்பிறந்த சுமுகா ஞான
வித்தகனே விண்ணோர்க்கு மேலாய் உன்னை
ஞாலமுளோர் புகழ்ந்தேத்தும் விதங்கள் யாவும்
நாவினுல் சொலவொண்ணு(து) அருமை யென்னே
கோலமத குஞ்சரமே சதங்கை கொஞ்சக்
கூத்தாடி எனையாள வருகு வாயே.

அன்னையுமை மனமகிழ்ந்து பயின்ற பாலா
அனைவோர்க்கும் முதற்பொருளே அன்பர் சீலா
நன்னயமாய் நின்பால்வந்(து) அடுத்தேன் என்றன்
நாவினுல் உனைப்பாட அருளிச் செய்தாய்
பன்னுதமிழ்க் கரசேமெய்ஞ் ஞான மூர்த்தி
பலகலைகள் ஆராயும் பயன்கள் நல்கி
இந்நிலத்தில் உன்மகிமை அறியச் செய்த
இங்கிதத்தை என்சொல்வேன் எம்பிரானே.

## இரெட்டியப்பட்டி சுவாமிகள் துதி

திரண்டிடும் அடியார் தீவினை தீர்ப்பான்
திருவுருக் கொண்டஎம் சிவமே
அரண்தரும் நின்றன் அடிமரை மலரை
அனுதினம் போற்றிசெய் கின்றோம்
இரண்டறக் கலந்தின் புற அருள் செய்வாய்
இணையிலா (து) உயர்ந்திடு பவனே
முரண்படல் இல்லா இரெட்டியப் பட்டி
முது நகர் வருகுரு பரனே

அன்பு செய் வார்க்கு வேண்டுவ தந்தே
அளித்திடு கருணையை உடையோன்
வன்பு செய் வார்க்கு மறக் கருணையினல்
வகைபடு நலம்வரச் செய்வோன்
முன்புபின் பில்லா முதல்வனென் றின்னும்
முழுமறை முழங்கிடு தலைவன்
நன் மனத் தவர் சூழ் இரெட்டியப் பட்டி
நகர்தனில் குருவென வந்தோன்

தரை புகழ் வளம் சேர் இரெட்டியப்பட்டித்
தனி நகர் வந்தடி யேங்கள்
உரை புகழ் ஏற்(று) உன் கருணையை அளித்தாய்
உய்ந்தனம் உய்ந்தனம் என்றும்

வரையினிற் சிறந்த கயிலையை விட்டு
வந்தனை தந்தனை ஞானம்
குரைகடல் உலகில் கண்ணினிற் கண்ட
குறைவிலாத் தெய்வம் நீயன்றோ

கண்டிடும் பொருள்கள் பற்பல வாயும்
காணொணாப் பல பொரு ளாயும்
விண்டிட முடியாப் பலபொரு ளாயும்
வேறுமாம் பல பொரு ளாயும்
தொண்டரை யாளும் குருபர னுயும்
துலங்கிடு சத்தியப் பொருளே
மண்டலம் புகழும் இரெட்டியப் பட்டி
வளநகர்க் குருபரா போற்றி

கருத்தினுக் கெட்டாக் கடவுளே உலகில்
கலந்திடும் அடியரைக் காப்பான்
உருக்கொடு வருவர் எனப் பல நூல்கள்
உரைப்பன உண்மையென் (று) அடியேம்
தெரிந்திடத் தவர் சூழ் இரெட்டியப் பட்டித்
திருத்தலம் செழிக்க வந்திடுவோய்
விரிந்திடும் எங்கள் மனம் மிக வொடுங்க
வெளி வரு குருபரா போற்றி

## அருட்சக்தி அன்னை துதி

அருட் சட்டம் வகுத்த ரெட்டிப் பட்டி குரு
அருட்பாத மலர்கள் போற்றி
அருட்சட்ட மேற்றருட் பள் ளிக்கொரு
சட்டாம் பிள்ளை யாய் விளங்கி
அருட்சட்ட அடியார் கட் கருள்புரிதற்(கு)
அருந்தவம் பல்லாண்டு பேணி
அருட் சட்ட நெறி பரப்பும் அருட் சக்தி
அன்னை திருவடிகள் போற்றி.



குருநாதர் திருவடி துணை

# அணிந்துரை

'அருட்சட்டத் திருவிளக்கு' என்னும் அரிய நூல் அடியவர் இல்லம் ஒவ்வொன்றிலும் இருக்க வேண்டிய வழி காட்டும் நூலாகும். மருந்து அருந்தலாகாது என்னும் தவம் பூண்டுள்ள அடியவருக்கும் நோய் வரலாம். 'நரைப்பு மூப்பொடு பிணி வரும்' என்பது மெய்யுரை. அப்படி வரும்போது, மருந்து உட்கொள்ளாமலேயே இயற்கை முறையில், உணவு வகையில்; இறைவன் அருளை நினைந்தே சட்ட நெறியில் நிலை நின்று நோய்களைப் போக்கிக் கொள்ளும் வழிகள் இந்த நூலில் தரப் பெற்றுள்ளன. மருந்து அருந்துவதால் உடலில் உண்டாகக் கூடிய குறைகள் எவையும், இவ்வழிகளைக் கையாளுபவர்களுக்கு உண்டாகா. அதற்கு மாருக, உடல் நோய் நீங்கித் திடம் பெறும்; மனம் அதைக் காட்டிலும் அருளில் வளம் பெறும்.

இந்நூலை எழுதிய தவத்திரு. கே. சாம்பசிவஅய்யர் அவர்கள் இதில் காணும் வழி முறைகளைத் தாமே வகுத்துக் கூறவில்லை. நம் குருநாதரும், அவர்தம் முழு அருளைப் பெற்ற அருட்சக்தி அன்னையாரும் கூறியருளியவற்றையே திரட்டி வரிசைப்படுத்தியிருக்கின்றார்கள். அன்னையார் அவர்கள்பால் அடைக்கலம் பூண்டு அன்னையாரின் அருளுரைகளை அருகிருந்து செவி மடுத்தவர் நூலாசிரியர். அவற்றைத் தமது மனமாகிய ஊற்றுன நல் அருவியில் தேக்கி வைத்திருக்கின்றார்கள். இந்தச் செய்திகளையே மற்ற அடியவர்களுக்கும் பயன்படும் பொருட்டு இந்நூலில் தொகுத்து இயம்பியுள்ளார்கள். அடியவர்கள் ஒருவருக்கொருவர் தம் அருள் அநுபவங்களைப் பகிர்ந்து கொள்ளவேண்டும் என்னும் குருபரனின் கட்டளையைச் சிரமேற்கொண்டு இந்நூலை இயற்றியிருக்கின்றார்கள். அடியவர்கள் பிணியுற்ற நிலையில் நடந்து கொள்ள வேண்டிய வழி முறைகளை திரு. அன்னை அவர்கள் தெரிவித்த வண்ணம் அறிவித்துள்ளார்கள்.

அருட்சக்தி அன்னையார் அவர்கள் அடியவர்களிடம் கொண்ட அருட்பாங்கினை இந்நூல் தெள்ளத் தெளியத் தெரிவிக்கின்றது. அவர்களை அணுகி நேரில் அறிந்து கொள்ள வாய்ப்புப் பெருமலிருந்த அடியவர்களும் அவர்களது அருளுரைகளால் பயன் பெற வேண்டும் என்று அவர்கள் கொண்டிருந்த பெருங் கருணைத்

திறத்தை இந்நூலாசிரியர் விதந்து விளம்புகிறுர். அன்னை பெருந் தகையார், திருமேனி தாங்கி நம் கண்முன்பு உலாவிய அந்நாளில் மட்டுமேயன்றிஇன்றும், எதிர்காலத்தில் எந்நாளிலும் அவ்வருட் பெருந்தகையாரின் அருளுரைகள் அடியவர் எவர்க்கும் வழி காட்டிவரும் வகையில், ஆசிரியரின் இந்நூல் அமைந்திருக்கிறது,

இந்த நூலில் சொல்லப் பெற்றவைகளை அடியவர்கள் மட்டுமே அறிந்து கொள்ள வேண்டும். மற்றவர்கள் படிக்குமாறு விடாமல் மறைவாக வைத்திருக்க வேண்டும் என்று ஆசிரியர் கூறுகிறுர். ஏனெனின், குருபரரின் அருட்சட்ட நெறியில் நம்பிக்கையில்லாதவர்களால் இவ்வழி முறைகளின் அருமை பெருமையை அறிந்து கொள்ள முடியாது. அருமை தெரியாத வர்களின் முன் முத்துக்களைச் சொரிவது போல் முத்தான இவ்வருளுரைகளைப் பலரும் காணச் செய்வது பொருத்தமற்ற தாகும். எனவே, ஆசிரியரின் எச்சரிக்கையைக் கவனத்தில் கொண்டு நடக்க வேண்டும்.

அடியவர்கள் அனைவரும் ஒரு தாய் வயிற்று மக்கள் என்னும் உண்மையை உணர்ந்தவர்களாய், "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்னும் நன்னோக்கத்துடன், இந்நூலை வரைந்து வழங்கியுள்ளவரும், என் சிந்தைக்கு இனிய செம்மலு மான தவத்திரு கே. சாம்பசிவ அய்யர் அவர்களுக்கு, அடியவர் உலகம் என்றும் கடமையுடையதாகும், மேலும் பல நுணுக்கங் களை, அடியவர்கள் ஆசிரியரை அணுகி அறிந்து பயன் பெறலாம். இத்தகைய அருட்பணிகள் இன்னும் பல ஆற்றி இந்நூல் ஆசிரியர் பல்லாண்டு பல்லாண்டு நல்வாழ்வு வாழ்ந்து வரவேண்டும் என குருதேவரின் திருவருளையும், அருட்சக்தி அன்னையாரின் கருணைத் திறத்தையும் தொழுது ஏத்தி உளமார வாழ்த்துவதை என் கடமையாகக் கொள்கிறேன்.

'தமிழ் மணம்'
சென்னை-30

கீ. இராமலிங்கம்,
20-2-1985.

---

ஐந்துபேர் வாழ்கின்ற வீடு—அதில்
அறிவான பொருள் ஒன்றை நாடு.

—ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# முகவுரை

பூவுலகில் வாழும் உயிர்களாகிய நாம் ஏன் பிறந்தோம் என்பதும், நாம் என்ன பேறு அடைய வேண்டும் என்பதும், அதற்கேற்ற வழி என்ன என்பதும் அறியாதவர்களாயுள்ளோம்.

இந்த வினக்களுக்கு விடை காண முயன்றவர்கள் பலர், உணர்ந்து முன்னேறி முழுப்பயன் அடைந்த அருளாளர்கள் பலர், 'யாம்பெற்ற இன்பம் பெறுகஇவ்வையகம்' என்ற நல்லெண்ணத் தால், தம் அனுபவங்களைச் சீடர்கள் மூலம் உணர்த்தியும், நூல் களாக எழுதி வைத்தும் உள்ளனர். அவை கடல்போல் விரிந்து காணப்படுகின்றன.

அவ்வக்காலத்திற்கும், அவரவர்களின் பரிபக்குவத்திற்கும் சூழ்நிலைகளுக்கும் ஏற்றவாறு அவை அமைந்துள்ளன.

அவைகளின் அடிப்படை உண்மைகளையும், தத்துவ விளக்கங் களையும் உணர இயலாத பல சீடர்களின் கருத்து வேற்றுமை யால், பிற்காலத்தில் இனச் சண்டைகளும், சமயப் பூசல்களும் தோன்றியதால், மக்களினம் உண்மையை உணர்ந்து, கடைப் பிடித்து, முன்னேறி அருள் வாழ்வாற்ற இயலாமல் திகைக்க நேர்ந்தது.

இத்தகைய சூழ்நிலையில் 1856-ல் திரு. இரெட்டியப்பட்டி சுவாமிகள் அவதாரமாகி, அருந்தவமாற்றி, சமயப் பொதுநெறி கண்டு இனம், மதம், செல்வம், வறுமை, கல்வி, கல்லாமை, நாடு வயது என்ற எந்தவகையான பேதமுமின்றி எல்லா உயிர் களும் எளிது கடைப்பிடித்து, இனிது முன்னேறி, அருள் துணை கொண்டு இன்ப வாழ்வாற்றி, இம்மை மறுமை நலங்கள் அனைத்தையும் எய்தி, இனி பிறவாப் பெருநிலையாகிய முத்திப் பேறு பெற்றுய்யத்தக்க அருள் நெறியைச் 'சட்டம்' என்ற பெயரால் உலகப் பொதுநெறியாக வகுத்து வழங்கியருளி, அதனைக் கடைப்பிடிக்கும் அடியவர் பலர்க்கும் அரும் பெரும் துணையாக என்றென்றும் திகழ்ந்து இனிது பேணி வருகின்றனர்,

அவருடைய அருள் வரலாறு, அருட்சட்டச் செந்நெறி அடியவர் பலர்க்காக அவர் ஆற்றியருளிய சில அற்புதங்கள் முதலியவற்றை விளக்கும் 'வழிகாட்டும் வான்பொருள்' என்ற அருள்நூல் 'செந்தமிழ் விளக்க வள்ளலார்', 'ஆட்சிச் சொற் காவலர்' அருள் திரு. கீ. இராமலிங்கனுர், எம்.ஏ., அவர்களால் எழுதப் பெற்று 1937-ல் வெளியாகியுள்ளது.

அருட்சட்ட நெறியைப் பேணி அனுபவம் மிகுந்த சில அடியவர்கள் மேலும் உணர்ந்து, கடைப்பிடிக்க வேண்டிய சில ரகசியக் கருத்துக்களை இந்நூல் விளக்குகின்றது.

இந்நூலாசிரியர், அருளனுபவத்திற்கனிந்து, அரும்பெருந் தவத்தால் பரிபூர்ண நிலையெய்தி விளங்கிய திருவார்திரு அருட் சக்தி அன்னையார் அவர்கள் மூலம் கேட்டறிந்த உண்மைகளையும், தம் அனுபவத்திற் கண்டுணர்ந்த சில முறைகளையும் இந்நூலில் தெளிவாக விளக்கியுள்ளனர்.

இவ்வினிய அருள் நூலை அடியவர் உலகிற்கு எழுதி உதவிய 'திருப்பணித் திலகம்' உயர்தவத்திரு. K. சாம்பசிவ அய்யர் அவர்களும், இந்நூலை அமைதியுடனும், ஊக்கத்துடனும், தூய பக்தியுடனும் நன்கு படித்து, அருட்பயன் எய்தும் அடியார் பெருமக்களும் எல்லா நலனும் இனிது எய்திப் பேரின்பப் பெரும்பேறு பெற்றுய்ய எல்லாம் வல்ல ஸ்ரீ குருபெருமானின் இணையிலாத் திருவருளும், திருவார் திரு. அருட்சக்தி அன்னை அவர்களின் மாபெருங் கருணையும் என்றென்றும் துணைபுரிய வேண்டுமென உளமுருகி வேண்டிக்கொள்கிருேம்.

வாழ்க குருபெருமான் திருவருள்
வாழ்க அருட்சட்டச் செந்நெறி
ஆண்டவர் அருள்

பாலகவி மி. கே. வேங்கடராமன்
வித்துவான் சு. மங்கையர்க்கரசி

---

வந்ததை ஒப்புக் கொள்வாய்—மனமே
வந்ததை ஒப்புக் கொள்வாய்
வந்ததுவே சிவன் தந்ததென் றறிந்து
சிந்தை மகிழ்ந்தே தேறித் தெளிந்து
வந்ததை ஒப்புக் கொள்வாய்.

—ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்



# ஆக்கியோன் குறிப்பு

பக்குவப்பட்ட ஆன்மாக்களை கடைத்தேற்றும் பொருட்டு அவ்வப்போது கடவுளே குருவாக வருகிறுர் என்ற நியதிக்கு அப்பாற் சென்று, பக்குவப்படாத உயிர்களையும் கடைத்தேற்ற வேண்டும் என்னும் மாபெருங் கருணையினுல் முழுமுதற் கடவுளே மனித வுருத் தாங்கி வந்த உண்மை நம் குருபரனுர் இரெட்டியப்பட்டி சுவாமிகளின் அருள்வரலாற்றில் இனிது விளங்குகிறது. எல்லா உயிர்களும் எளிமையாகக் கடைப்பிடித்து உய்யக்கூடிய மார்க்கத்தை அருட்சட்டம் என்ற பெயரால் உலகப் பொது நெறியாக வழங்கியருளிப் பேணிக்காப்பவர் நம் குருபர னுர் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் ஆவர்.

"உடையவன் கணக்கு இப்போதேயா விளங்கிவிடும்? இன்னும் போகப் போகத்தான் விளக்கமுறும். அவனுடைய அருட்கொடி உலகமெங்கும் பறக்கும். அவனுடைய அருளாட்சி உலகில் உள்ள மிகமிகப் பெரிய அரசாட்சிகளிலும் மேலானது" என்று நம் குருபெருமான் அருளிய அமுத மொழிகள் இன்னும் அனைவர் காதுகளிலும் ஒலித்து ஊக்கி உய்வித்து வருகின்றன.

குருபெருமானின் அருட்சட்ட நெறியை நம் எல்லோருக்கும் இனிது விளக்கி அருள்பாலித்த வண்ணம் திகழ்பவரே கருணை கனிந்திலங்கும் அருட்சக்தி அன்னை ஆவர்.

ஸ்ரீலஸ்ரீ அருட்சக்தி அன்னை அவர்கள் அரும்பெரும் தவத்தவர். குருபெருமானின் திருவருளைப் பெற்றவர். ஆயிரக் கணக்கான குடும்பங்களுக்கு அருள்வழி காட்டும் தலைவர். அடியவர்களைத் தவ நெறியில் நிறுத்தும் தனிப்பெருந்தாய், அருட்சட்ட நெறிக்கு விளக்கம் அளிக்கும் ஆசிரியர். அடியவர் களின் பிணியெலாம் நீக்கிப் பெருநலம் விளைக்கும் பெருமாட்டி யார். திகைப்பினைத் தவிர்த்துத் தெளிவு தந்தருளும் தெய்வ மணியாகத் திகழ்பவர். மாபெரும் சக்தி பூண்டவர்,

அன்னை பெருந்தகையார் அருளமைவு பெற்றுத் திருக் கோயில் கொண்டபின், சட்ட அடியவர்கள் அவர்களுடைய ஐயங்களை யாரிடம் கூறித் தெளிவு பெறுவது என்றும், குறைகளை யாரிடம் கூறித் தீர்த்துக் கொள்வது என்றும் எண்ணிக் கலக்கம் அடைந்தார்கள். அவ்வாறு அடியவர்கள் கலக்கம் அடையத் தேவையில்லை.

இன்றும் அருட்சக்தி அன்னையின் மாபெருங் கருணை எங்கும் நிறைந்துள்ளது. சிறப்பாகச் சட்ட அடியவர்களின் தூய இதயங் களில் பொலிவுற்று விளங்குகிறது. எல்லா நலங்களையும் விளைவிக்கின்றது. இனி எக்காலத்தும் அத்தனிப் பெருங் கருணை அணுவளவும் குன்ருது, மேலும் மேலும் வளர்ந்தோங்கும். அகில உலகிற்கும் அருள் நலம் விளைத்தருளும். திருவார் திரு அன்னை அவர்கள் உலவிக் கொண்டிருந்த போதே அடியவர் களிடம் இக்கருத்தைத் தெரிவித் துள்ளார்கள்.

குருநாதர் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் அருள் உலா செய்து வந்தபோது!

''இந்தச் சாமி எப்போதும் இருக்கும்
அடியவர்களுக்கு வேண்டிய அருள்
நலங்கள் அனைத்தையும் என்றென்றும்
விளைவிக்கும். இதில் அணுவளவும்
ஐயுற வேண்டியதில்லை.''

என்று அடியவர்களிடம் அருளியுள்ளார்கள். இவ்வுண்மையை இப்போதும் அனுபவத்திற்கண்டு வியந்து உவந்து உருகிப் போற்றுகின்ருேம்.

இவ்விரு பெருந்தகையாரின் மாபெருங் கருணையால் அருட் சட்டச் செந்நெறியை விளக்கி ''வழிகாட்டும் வான்பொருள்'', ''கருணை மிகுவள்ளல் அருள் நிறை சரிதம்'', ''சமயப் பொது நெறிகண்ட சற்குருநாதர்'' முதலிய நூல்கள் வெளிவந்துள்ளன. அப்பெருங் கருணையாலேயே இந்நூலும் வெளிவருகின்றது.

இந்நூலில் காணும் பல விஷயங்களும் ஸ்ரீ அருட்சக்தி அன்னையின் வாயிலாகத் தெரிந்தவைகளாகும். அடியேனது குடும்பத்தில் நேர்ந்த நோய்களின் மூலமாக அறிந்த அனுபவங் களும் இதில் குறிப்பிடப்பட்டு உள்ளன, ஆனுல் இவைகள் தாம் முடிவு என்று எண்ண வேண்டாம். பலப்பல அடியார்களிடம்

ஸ்ரீ அன்னையார் பல விவரங்களை அருளி உள்ளார்கள். அடியார் களுக்கும் பல அனுபவங்கள் ஏற்பட்டு இருக்கலாம். அதிலிருந்து மேலும் விளக்கங்கள் கிடைக்கலாம்.

சிறந்த அடியார்கள் ஸ்ரீ ஆண்டவரின் அருட்குறிப்பு அறிந்து அதன்படி நடந்து அருள்பெறுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன். மேலும் விளக்கம் தேவைப்படுமாயின், பிள்ளையார் குப்பம் ஸ்ரீ அருட்சக்தி அன்னை ஆசிரமத்திற்குத் தெரிவித்தால் அன்னை யார் அருளால் பதில் கிடைக்கும்.

இந்த நூலிலுள்ள பல விஷயங்கள் அருட்சட்ட நெறியில் நம்பிக்கையும், அனுபவமும் உள்ள அடியவர்களுக்கு மட்டுமே தெரியவேண்டியவை. எனவே ரகசியமாக வைத்துக்கொள்ள வேண்டியவை யாகும். மற்றவர்கட்கு இவ்விஷயங்களின் அருமை, பெருமை தெரியாது. ஆதலால் ஸ்ரீ ஆண்டவர் சட்டத்தில் முழு நம்பிக்கையுடன் தீவிரமாக நடந்து வருபவர் களிடம் தவிர, எவர்களிடமும் இந்நூலினைக் காண்பிப்பது கூடாது. வீட்டிலே கூட மற்ற எவரும் பார்க்க முடியாதப்படி பத்திரப்படுத்தி வைத்திருக்க வேண்டிய அருமையான செய்திகள் இவை. அடியார்களைத் தவிர வேறு யாரிடமும் தயவுசெய்து இந்நூலைக் கொடுக்க வேண்டாமென மீண்டும் ஒருமுறை பணி வுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஆண்டவர் சட்டத்தில் உள்ளவர்கள் கடைப்பிடிக்கும் கொள்கைகளையும், அதனால் ஏற்படும் நன்மைகளையும், ஆண்டவர் நமக்கு நிஷ்டையில் தெரிவிக்கின்ற குறிப்புகளையும் நெருங்கிய அடியவர்களைத் தவிர வேறு எவரிடமும் கூறலாகா தென்பது குருநாதர், அன்னை இருவரது கட்டளை என்று அறிவோம். அக்கட்டளையை உறுதியுடன் காப்பது நம் கடமை யாகும். தவறினால் மேலும் நன்மைகள் கிடைக்காமல் போகும். பக்தியுடனும், சிரத்தையுடனும் இவ்வழி முறைகளைப் பயன் படுத்திக் கொள்ள வேண்டுகிறேன்.

இலக்கண இலக்கியம் படித்து உணரும் வாய்ப்பு ஏதும் பெற்றறியாத எளியேனால் அருள்துணை கொண்டு எழுதப் பெற்ற இந்நூலைப் படித்துப் பார்த்து, திருத்த வேண்டிய இடங்களில் திருத்தி, செம்மைப்படுத்தித் தந்தருளியதோடு, அருட்சுவை மிக்க அணிந்துரை ஒன்றும் வரைந்து உதவிய 'நற்றமிழ் வித்தகர்' அருள்திரு கீ. இராமலிங்கனார், எம்.ஏ., அவர்களுக்கும், இந்நூல் இனிது அமைய ஆவன புரிந்தும், இனியதொரு முகவுரை

எழுதித் தந்தும் உதவிய திருவாளர்—பாலகவி—மி. கே. வேங்கடராமன் அவர்கட்கும், செந்தமிழ் வித்துவான் உயர்தவத் திருமதி. சு. மங்கையர்க்கரசி அம்மையார் அவர்கட்கும், இந்நூலைக் குறுகிய காலத்தில் செவ்வையான முறையில் அழகுற அச்சிட்டு உதவிய சென்னை—மூவேந்தர் அச்சக உரிமையாளர் அவர்கட்கும் எனது உளம்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இவர்கள் அனைவர்க்கும், இந்நூலை அன்புடன் ஓதி உணர்ந்து, செயல் முறையில் கடைப்பிடித்து அருட்பயன் எய்தும் அடியார் பெருமக்கட்கும் இம்மை மறுமை நலங்கள் அனைத்தும் இனிது வழங்கி என்றென்றும் காத்தருளுமாறு எல்லாம் வல்ல எந்தை குருபரனுரையும், திருவார் திரு அருட்சக்தி அன்னையாரையும் இறைஞ்சி வேண்டுகிறேன்.

பிள்ளையார் குப்பம்
22-3-1985

இங்ஙனம்
**K. S. சிவம்**

---

பல்லுயிர்க் கெல்லாம் பரமனே இருக்கப்
பஞ்சமும் உண்டோ பயம் நமக்கேது?

* * *

—ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்

# பொருளடக்கம்

---

பாசப் பகையை அறுத்து—ஸ்ரீ ஓம் என்ற
பஞ்சாக்ஷ ரத்தை நிறுத்து.

* * *

மும்மலங் களைப் போக்கு—பிராரத்வ கன்மம்
முழுதும் புசித்து நீக்கு.

நின்மலன் அடிதாக்கு—நிஷ்களங்கமாய்
நிஷ்டானு பூதி நோக்கு.

* * *

என்னைத் தடுத்துஎம் இறைவன் பணி கொள்ளத்
தன்னைக் கொடுத்த(து) அதிசயம் என்சொல்வேன்.

* * *

பார்க்க மறைவுமுண்டு; பார்த்திருக்கச் சோதியுண்டு
தீர்க்கம் உள்ள மாதவர்க்கு—தெரிசனங்கள் தோன்றுமடி.

* * *

—ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்



# அருட்குருநாதர் வரலாறு

உலகம் தோன்றிய நாள்முதல் உலகின் பல பாகங்களிலும், பல காலங்களிலும் அருளாளர் பலர் தோன்றி அருள்நெறி கண்டு இன்பம் அடைந்துள்ளனர். தாம் பெற்ற பேரின்பத்தைப் பலரும் பெறவேண்டும் எனக் கருதியுள்ளனர்; முயன்றுள்ளனர்; தம்சிறந்த கருத்துக்களை எழுதி வைத்தும் சென்றுள்ளனர். அவர்கள் அனைவரின் கருத்தும் செயல் முறையில் நிறைவேற, எல்லாம் வல்ல பரம்பொருளின் அருட்பெருங் கருணையே ஒருருத் தாங்கி உலகின் கண் அவதரித்ததைப் போன்று, செந்தமிழ் நாட்டில், திருநெல்வேலி மாவட்டத்தில், கோவில்பட்டிக்கு 28 மைல் தொலைவில் இருக்கும் நாகலாபுரத்தை அடுத்துள்ள *இரெட்டியபட்டி என வழங்கும் இருடியர் பட்டித் திருத்தலத்தில் கி.பி. 1856ல் நள ஆண்டு புரட்டாசி மாதம் இரேவதி நன்னாளில், சைவ வேளாள மரபில் சுவாமிகள் 'சுப்ரமண்யம்' என்ற பிள்ளையாகத் தோன்றியருளினர். ஆங்கிருந்த ஒரு திண்ணைப் பள்ளிக்கூடத்தில் எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டனர். குலத்தொழிலாகிய விவசாயத்தில் ஈடுபட்டனர். நிலம் பன்மடங்கு விளைவைத் தந்தது. அத்தருணம் அவ்வூர் ஏழை மக்கள் அன்றுட வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை அதிக விலை கொடுத்து வாங்குவதைக் கண்டு வருந்தி, தூத்துக்குடிக்கு

---

*மதுரையிலிருந்து அருப்புக்கோட்டை, புதூர், நாகலாபுரம் வழியாக 52 மைல் சென்றாலும் பஸ் மூலம் இரெட்டியப் பட்டியை அடையலாம்.

வண்டி கட்டிச் சென்று, சரக்குகள் வாங்கி வந்து, கொள் விலைக்கே விற்று, ஏழை மக்கட்கு உதவினர். இவர் செயல் வீட்டில் உள்ளார்க்கு வருத்தந் தந்தது. இவர் மதுரைக்குச் சென்று ஒரு முகம்மதியர் கடையில் கணக்குப் பிள்ளையாய் அமர்ந்தனர்.

நாள்தோறும் விடியல் மூன்று மணிக்கு எழுந்து வைகை நதிக்கேகி, நான்கு மணிக்குள் நீராடி, முன்னவனுர் வழிபாடு செய்து வந்தனர். சர்வஜித்து ஆண்டிலே ஒரு நாள் வழக்கம் போல் நீராடி முடிந்ததும், ஒரு சிறந்த அருட்ஜோதியைக் கண்டு அருகே செல்கையில், அதன் நடுவில் விநாயகர் திருவுருவைக் கண்டு, ஆனந்த பாஷ்பம் சொரியச் சொல்லொணுப் பெருமகிழ்வுடன் ஆலிங்கனம் செய்துகொண்டபோது, அது ஒரு விநாயகர் சிலையாக மாறியதைக் கண்டு, பேரானந்த முற்று அம்மூர்த்தியை எடுத்து, ஒரு மேடைமீது அமர்த்திப் 'பரி பூர்ண விநாயகர்' எனத் திருநாமம் சூட்டி, நீராட்டி, மலர்சூட்டி, தூப தீபம் காட்டி, நைவேத்தியம் செய்து வழிபாடு ஆற்றினர். தொடர்ந்து நாள்தோறும் வழிபாடு ஆற்றி வந்தனர். அன்பர்கள் கூட்டம் நிறைய வந்து கோரிய நலங்களைப் பெற்றும், குறைகள் பல நீங்கப் பெற்றும், கைம்மேல் பலன் கண்டு களிமிகக் கொண்டு வழிபடலாயினர்.

வடநாட்டிலிருந்து மதுரை திரும்பிய சுவாமிகள் வைகை நதியில நீராடி வழக்கம்போல வழிபாடு தொடங்கியது கண்ட அன்பர்கள் ஆனந்தமுற்றுக் கூடலாயினர். அன்பர்கள் பலரும் இந்த அருட்செய்தி அறிந்து, அங்ஙனே அம்மூர்த்திக்கு *ஒரு திருக் கோயில் அமைத்தனர். அடியவர் கூட்டம் பெருகி வந்தது. ஆனல் சுவாமிகள் அகமுக நோக்கில் அதிகமாக ஈடுபடலானுர்கள். ஒருநாள் வழக்கம்போல் கடையின் முன்புறத் திண்ணையில் நிட்டையில் அமர்ந்த சுவாமிகள் பின்னர் வியாபார நிமித்தம் கடைக்கு உரியவர்களின் கருத்தின்படி சிலகாலம் பம்பாய்

---

*இத்திருக்கோயில் மதுரை மாநகரில் வைகை நதியின் தென் கரையில், ரயில் வண்டி செல்லும் பாலத்திற்கு மேற்கில் கிழக்கு நோக்கியதாக அமைந்துள்ளது. நித்திய பூஜை நடந்து வருகிறது.

சென்று தங்க நேர்ந்தது. அங்கும் தம் தினசரி ஒழுக்கத்தை முறையுடன் போற்றி வந்தனர். அங்கிருந்து திரும்புகையில் வடஇந்தியாவிலும், சென்னை மாநகர் போன்ற நகரங்களிலும் உள்ள கிறிஸ்தவப் பாதிரியார்களுடனும், அரசாங்க அலுவலர்களுடனும் அளவளாவ நேர்ந்தபோது கிறிஸ்தவ சமய உண்மைகளையும், கொள்கைகளையும், அரசாங்கச் சட்ட அமைப்புகளையும் உணர நேர்ந்தது. ஏற்கனவே கடைக்கு உரியவர்களோடு தொடர்பு கொண்டிருந்ததால், இந்துஸ்தானி மொழித் திறமையும், இஸ்லாம் மதத்தின் கொள்கைகள், குரானில் உள்ள சிறந்த உண்மைகள், உயர்ந்த கருத்துக்கள் முதலியனவும் அவர்கள் உள்ளத்தே அமைந்திருந்தன. எல்லா மதங்களின் சிறந்த உண்மைகளும், உயுர்ந்த கருத்துக்களும் முடிவாக ஒரே பேருண்மையை விளக்கும் அற்புதம் அறிந்து, அனைத்துயிரும் இப்பேருண்மையைக் கடைப் பிடித்துப் பேரின்பமடைய எளிய வழியொன்று இருத்தல் வேண்டும் என அவரது திருவுள்ளம் எண்ணியவாறே இருந்தது. சுவாமிகள் சில நாட்கள் எழுந்திருக்கவே இல்லை. ஒரு நாள் எழுந்து குற்றாலம் சேர்ந்து, சண்பக மாதேவி அருவிக்கருகில் உள்ள ஒரு குகையுட் சென்று நிட்டையில் ஆழ்ந்தனர். பொதிகை மாமலையில் பல ஆண்டுகள் கடுந்தவம் புரிந்து பிறவிப் பெரும் பயன் பெற்றனர். தாம் பெற்ற பேரின்பத்தை எல்லா நாட்டினரும், எல்லா மொழியினரும், எல்லா இனத்தவரும், எக்காலத்திலும், எவ்விதத் தடையுமின்றி, எவ்வித வேறுபாடுமின்றி, எளிய முறையில் பெற்றுய்ய வேண்டும் என்ற பெருங்கருணையுடன் 'சட்டம்' என்ற ஒரு சிறந்த செந்நெறியை வகுத்தருளினர்.

மிக உயர்ந்த அருட்பெரு நெறியை மாபெருங் கருணையால் உலகுக்கு வகுத்து வழங்கிய சுவாமிகள் ஆங்காங்கும் பக்குவம் பெற்ற அடியார் பலரின் இருப்பிடம் நாடிச் சென்று ஆட்கொண்டு அருள்புரிந்து அவர்களின் நல் வாழ்விற்கு அருந்துணையாய் நின்று ஊக்கிவரலானார்கள். கி.பி. 1923 ஜனவரியில், துந்துபி ஸூ மார்கழி மீ 28உ வெள்ளிக்கிழமை, ஏகாதசி திதி, அனுட நன்னாளில் அருளடக்கமாயினர். சுவாமிகள் தரைமீது அவதரித்த

அதே இடத்தில் அடக்கம் செய்யப் பெற்று, திருக்கோயில் அமைக்கப் பெற்றுள்ளது.

உலகினர் கண்ணுக்குத் தோன்ருது மறைந்தருளிய பின்பும் சுவாமிகள் அருட்சட்ட அடியவர்க்கும் அன்பர் கட்கும் என்றென்றும் துணையாயிருந்து அருளாட்சி புரிந்து பேணிவரும் அற்புதத்தை அனைவரும் இன்றும் அறிந்து ஆனந்தமுறுவது உண்மையிலும் உண்மை.

நாட்டின் பல பாகங்களிலும், பல இனங்களைச் சார்ந்த பல ஆயிரக்கணக்கான குடும்பத்தினர் மேற்கண்ட சட்ட முறைகளைத் தமது வாழக்கையில் கைக்கொண்டு, இம்மை மறுமை நலங்கள் அனைத்தையும் எளிதிற் பெற்று கைம் மேல் பலன் அடைந்து வருவதை இன்றும் கண் கூடாகக் கண்டு, எவரும் கையாண்டு நற்பயன் பெற்றுய்யலாம் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

# அருட் சட்டம்

சட்டத்தின் சிறப்பான கொள்கைகளின் சுருக்கம் வருமாறு: —

1. ஒவ்வொரு நாளும் விடியற்காலை 4மணிக்கு மேல் 5மணிக்குள் பச்சை நீரில் முழுகவேண்டும்; தலையும் நனைய நீராட வேண்டும்.

2. குடிக்கவோ, குளிக்கவோ, எக்காரணம் கொண்டும் வெந்நீரைப் பயன்படுத்தலாகாது.

3. நீராடி முடிந்ததும், விநாயகர் கோவிலுக்குச் சென்று மும்முறை வலம் வந்து, மனமுருகி வழிபட்டு வணங்க வேண்டும். (எந்த மதத்தினராயினும், தத்தமக்குரிய வழக்கப்படி வழிபாடு செய்யலாம்.) தண்ணீரில் திருநீறும் துளசியும் இட்டு உள்ளுக்குப் பருக வேண்டும்.

4. உலகெலாம் படைத்துக் காக்கும் ஒரு பரம் பொருளைப் பலமதத்தினர் பல உருவங்களில் வழிபட்டுப் பயனடைகின்றனர்; ஆனால் பரம்பொருள் ஒருவரே என்ற தீர்மானமான எண்ணம் கொள்ள வேண்டும். எந்த மதத்தினையும் நிந்தித்தல் கூடாது.

5. புலாலுண்ணல், பொய் பேசல், கள்குடித்தல், சூதாடுதல், திருடுதல், புகைபிடித்தல், புகையிலை முதலிய லாகிரி வஸ்துக்களைப் பயன்படுத்துதல், பொல்லாரோடு உறவாடுதல் முதலியன ஆகாது.

6. எந்நோய் வரினும், எத்துயர் வரினும், எத்தகைய சிக்கல் ஏற்படினும், ஒரு மருத்துவரையோ, ஒரு மனிதரையோ தஞ்சம் என்று அடையாது, எல்லாம் வல்ல இறைவனையே தஞ்சம் எனப்பற்றி, உறுதியாக நின்று, உயர்பயன் பெறவேண்டும்.

7. நோயுற்றகாலை இருவேளை பச்சை நீரில் முழுகித் திருநீறு பூசி, திருநீறும் துளசியும் இட்டதீர்த்தம் அருந்தி மனமுருகி இறையருளைநாடி, அவனருள் துணையால் நோய் நீக்கம் பெற்றுப் பயனடைய வேண்டும். விஷக்கடி வெட்டு ரணம், பிரஸவம் முதலிய எதற்கும் மருத்துவம் நாடாது திருநீறு, தீர்த்தம் கொண்டே அருட்பயன் காண வேண்டும்.

8. வைத்தியம், ஜோதிடம், மாந்திரிகம் இவைகளை நம்பி ஏமாருமல், மருந்து, மணி, மந்த்ரம் முதலியன மருவாமல், 'எல்லாம் வல்ல கடவுளே கதி' என்ற பரிபூர்ண நம்பிக்கையோடு, தளராத நெஞ்சத்துடன், இறைவனருள் நாடி அருளாற்றலால் அனைத்து இடுக்கண்களையும் வென்று நற்பயன் பெறவேண்டும்.

9. இந்தத் தீது அகன்ருல், இந்த நன்மை கை கூடினுல் இன்னது செய்கிறேன் என்று தெய்வத்திற்குப் பிரார்த்தனை செய்து கொள்ளும் பழக்கத்தைக் கைவிட வேண்டும்.

10. வெள்ளிக்கிழமை தோறும் ஒருவேளையாவது உணவைக் குறைத்துக் கொண்டு, விரதம் இருந்து பயில வேண்டும்.

11. எப்போதும் ஆண்டவர் திருநாமத்தை மனனம் செய்தவண்ணம், உடல்பொருள் ஆவி அனைத்தையும் உடையவனிடம் ஒப்படைத்து, அச்சமும் பற்றும் அணு வளவும் இன்றி, அருள் வாழ்வு வாழப்பழகுதல் வேண்டும்,

12. தினந்தோறும் ஆண்டவர் அருளைவேண்டி எந்தப் பிற எண்ணமும் இன்றி, அமைதியாக அமர்ந்து, அருள்நிட்டை பேணி, ஆனந்தம் எய்தப்பழக வேண்டும்.

13. சட்ட அனுட்டானத்தில் உள்ளவர்களில் யாருக்காவது உலகில் உலாவும் காலம் முடிந்து உயிர் அடக்கமாக நேர்ந்தால் அதற்காக வருந்தாது, அவர்களின் உடலை எரிக்காது, மண் மறைவு (சமாதி) செய்தல் வேண்டும்.

14. உலக விவகாரங்களில் சிக்கல்கள் நேரும்போது, அறக்கடலாகிய இறைவனின் அருள்துணைநாடி அற முடிவைப் பெறமுயல வேண்டுமேயன்றி, அறமன்றம் நாடி விவகாரங்களை விபரீதமாக வளர்த்துக் கொள்ளுதல் கூடாது.

15. சட்டநெறியில் ஈடுபட்டுள்ளோர் தவறி நடந்தால் அவர்கட்கு அறிவுறுத்தத் திருவருளால் உடல் உபாதி முதலிய தண்டனை ஏற்படலாம். அவர்கள் உடனே உண்மையை உணர்ந்து, தவறு புரிந்தமைக்கு மன்னித்து அருள் புரியுமாறு இறைவனை உருகி நினைந்து வேண்டிக் கொண்டால், உடனே பரிஹாரம் ஏற்படும். ஏற்பட்ட தண்டனை நிவர்த்தியாகும்.

16. 'வேலைக்கு ஏற்றகூலி' என்பதுபோல், எந்த அளவு சட்டத்தை உறுதியும் ஊக்கமும் கொண்டு கைப் பற்றுகிறோமோ, அந்த அளவுக்குக் கைமேல் பயன் கிட்டுவதையும், தூயநல்வாழ்வு அமைவதையும், இறைவன் அருள் முன்னின்று எல்லாவகைக்கும் வழிகாட்டி அழைத்துச் செல்வதையும் நாம் நன்கு உணர்ந்து அருள் துணைகொண்டு முன்னேறலாகும்.

ஆண்டவர் அருட்சட்டத்தில் ஈடுபட்டிருப்பதையும் அதனால் ஏற்படும் நன்மைகளையும், முன்னேற்றத்தையும் அவர் அருளால் நிகழும் அற்புதங்களையும், பெருமை யாகவோ, பிறர் மெச்சிக் கொள்ளவோ, வெளியிட்டுக் கூறுதல் ஆகாது; இரகசியமாக உள்ளத்துள் வைத்துப் போற்றி உய்வுபெறுதல் வேண்டும் எனச் சுவாமிகள் அருளியுள்ளார்கள் என்பது விளங்குகிறது.*

---

*சுவாமிகள் வாழ்க்கை வரலாறும் அவர் உலகுக்கு வழங்கி யுள்ள அருட்சட்ட நெறியின் விவரங்களும் இன்னும் விரிவாகக் காண விரும்புவோர் 'வழிகாட்டும் வான் பொருள்' என்ற நூலில் காணலாம்.

# விநாயகர் பெருமை

ஆதிமூலப் பொருள்.

எல்லாத் தெய்வங்களாலும் வழிபடத்தக்கவர்.

எல்லா உலகையும் தன்னுள் அடக்கிப் பேணுபவர். எங்கும் திகழ்பவர்.

ஓங்காரமாம் மூலமந்திரத்தை உருவமாகக்கொண்டவர். ஆங்காரம் தவிர்ப்பவர்.

விலங்குருவம், தேவஉருவம், பூதஉருவம் ஆகிய மூன்றுருவும் கலந்த உருக் கொண்டவர்.

யார் எப்பக்குவத்தில் இருந்து வழிபட்டாலும் அருள் புரியும் இனியவர்.

யார் யார் எந்த எந்த நிலையில் வைத்து வழிபடினும் அவரவர்கட்கு அந்த அந்த நிலையில் பயன் அருள்பவர்.

உலகசுகம் முதல், முத்திப் பேறுவரை அனைத்தும் அருள்பவர்.

நதிக்கரையில், குளக்கரையில், அரசடியில் நாற் சந்தியில், முச்சந்தியில், சிறிய, பெரிய, திருக்கோயில்களில் அமைந்து விளங்கி அருள்புரிபவர்.

தன்னை நாடிவரும் உயிரினங்களைப் பிழை கருதித் தள்ளாமல் இறுதிவரை பேணிக் காப்பவர்.

உயிர்கள், வினைக்கடலை, பிறவிக்கடலைக் கடந்து அருள்மயமாகி பேரின்பநிலை எய்தும் வரை, தனித் துணையாய், வழித்துணையாய் இருந்து புரப்பவர்.

தன்னை அன்போடு நினைத்துத் தொடங்கும் செயல் அனைத்தினையும் எளிதினில் நிறைவேற்றி அருள்பவர்

வேதம் அனைத்தினுக்கும் மூலகாரணமாய், வேதங்களுக்கு அப்பாற்பட்டவராய், வேதங்களின் உட்பொருளாய் விளங்குபவர். ஞான மயமாய்ப் பொலிபவர்.

சிறிதளவு தவம் செய்தாலும், பெருமளவில் பயன் அருள்பவர். பிறவிக்கடல் கடத்தி உயிரினத்தைக் கரை சேர்க்கும் இயல்பு உடையவர்.

அவ்வையாரை அரைநொடியில் கைலாயத்திற் சேர்த்தவர்.

விநாயகரின் அருட்புகழை யார் யார் கேட்டாலும், நினைத்தாலும் இகபர நலங்கள் அருள்பவர்.

எல்லாத் தெய்வங்களுக்கும் உரிய மந்திரங்கள் அனைத்தினுக்கும் மூலகாரணமாய் விளங்கும் பிரணவ மந்திரத்தையே திருஉருவமாகக் கொண்டிலங்கும் திவ்ய மூர்த்தி எனத் திகழ்பவர்.

செப்புதற்கரிய சிறப்புமிகக் கொண்டவர்.

ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் எனும் ஐந்தொழில்களையும் புரிந்தருளி உயிர்த்திரளை இனிது உய்விக்கும் ஐந்து திருக்கரங்களை உடையவர்.

பல்லாயிரங் கோடி அண்டங்களையும் தன்னுடைய பெருத்த தொந்தியுள் அடக்கிப் பேணிக் காக்கும் பெருங் கருணை உடையவர்.

பரஞானம், அபரஞானம், ஆகிய அனைத்து ஞான நிலைகளையும் அருளி ஆளும் இரண்டு திருவடிகளை உடையவர்.

அவருடைய மூன்று கண்களும் உயிர்த் திரளின் மும்மலங்களை எரித்து முத்திப் பேறு பெறுமாறு இனிது உய்க்கத்தக்கன.

அவருடைய வலத்திருக்கரத்தில் அமைந்துள்ள அங்குசம் உயிர்வகையின் அகங்காரத்தினைத் தகர்த்து, தவத்திற்கு ஊக்கும் ஆற்றல் மிக்கது,

அவருடைய இடத்திருக்கரத்தில் திகழும் பாசம் (கயிறு) உயிர்த்திரளை எம பாசத்தில் சிக்காதபடி காத்தருளி, அன்போடும், மிக விரைவிலும் அவர் (விநாயகர்) பால் ஈர்க்கும் மகிமை சான்றது.

எக்கணமும் விநாயகரைச் சிந்தை செய்தால் இன்பமெலாம் நன்று எய்தும்.

அவருடைய வலத்திருக்கரமான அபய ஹஸ்தம் எல்லா உயிர்களுக்கும் உறுகின்ற இடர் அனைத்தையும் அகற்றி ஆண்டருளும்.

சுவை மிக்க மோதகம் தாங்கிய இடத்திருக்கரம் எல்லா உயிர்களுக்கும் உணவூட்டி நன்கு இனிது காத்தருளும்.

உய்வை நாடி உயர்தவம் புரிவோர்க்கு உயர்ந்த திருவமுதத்தை அவருடைய துதிக்கையில் அமைந்திலகும் கும்ப கலசம் வழங்கிக் காத்தருளும்.

சஞ்சிதம், ஆகாமியம், பிராரத்துவம் ஆகிய மூவகை வினைகளையும் எரிக்கும் கனலாக விநாயகர் விளங்குகிறார்.

அவர் கடைக் கண்ணால் நோக்கின், அனைத்து உயிர்களும் அவனிமிசை நல்வாழ்வு எய்தும்.

அவர் துதிக்கை அயர்வில்லாத உண்மையன்பு மிகுந்த அடியவர்கட்கு அருள் சுரந்து நீராட்டிப் பேணியருளும்.

அவருடைய மலர்போன்ற சேவடிகள் அடியார்களின் சென்னி மிசை பதிந்து பிரமன் எழுதிய தலை எழுத்தினை அழித்து அருள்புரியும்.

அவர் திருவுளம் பற்றின், அடியார் அனைவரும் பேரானந்தமயமாகி விளங்குவர்.

தானம் தருமம் முதலியன அனைத்தும் வளரத் தக்கபடி வளங்கள் யாவும் அருள்பவர் விநாயகர்.

ஊனமெலாம் தவிர்த்தருளி உயர் நலங்கள் கூட்டுவித்து அருளாட்சி புரிபவர் விநாயகர்.

ஞானவளம் கூட்டுவித்து அஞ்ஞான நிலையினைத் தவிர்த்து ஆட்கொண்டருள்பவர் விநாயகர்.

மோன நலம் கூட்டுவித்து முத்தி பெறுவதற்கேற்ற பக்குவம் செய்விப்பவர் விநாயகர்.

தெளிவருளி, சிவஞானப் பேறருளி தெய்வ நலங் கூட்டுவிப்பவர் விநாயகர்.

தளையறுத்து, தவமளித்து, சச்சிதானந்த முத்தி தந்து காப்பவர் விநாயகர்.

எளியமுறையினில் இவரை வழிபட்டு எத்தகைய வரங்களையும் பெறுதல் கூடும்.

அதர்மத்தினை அழித்து தர்மத்தை நிலைநாட்டும் முழு முதற் கடவுளே விநாயகர்.

விநாயகர் திருவுருவை கல், மரம், செம்பு, வெள்ளி சாணம், களிமண், மஞ்சள், வெல்லம் போன்ற பொருள் களில் எளிய முறையில் யாரும் அமைத்து வழிபட்டு அருள்பெறலாம்.

"பிடித்து வைத்தால் பிள்ளையார்" என்பது பழமொழி. சாதாரணமாக △முக்கோணம்போல அமைத்து வழிபடுவது வழக்கம். அது எல்லா மதங்களுக்கும் ஏற்புடைய ஜோதி வழிபாட்டைக் குறிப்பதாகும்.

எல்லா உலகங்களிலும் நீக்கமின்றி நிறைந்து விளங்கும் பரிபூர்ணப் பொருளே விநாயகர். அதனுல் தான், நம்குருபெருமான் அவருக்குப் பரிபூர்ண விநாயகர் எனத் திருப்பெயர் சூட்டினர்.

எந்தத் தொழிலைத் தொடங்கினுலும், எந்தச் சடங்கைத் தொடங்கினுலும், எந்த நூலைத் தொடங்கினுலும் விநாயகரை வழிபட்டுத்தான் தொடங்குவர்.

விநாயகரைத் தமது உளக்கோயிலில் எழுந்தருளச் செய்து போற்றியவர், விநாயகராகவே விளங்குபவர் நம் குருநாதர். குருபரரால் ஆட்கொள்ளப் பெற்றுக் குருபர ராகவே இலங்கும் அருட்சக்தி அன்னையாரும், தாயுளம் கொண்ட விநாயகராக விளங்குபவர்.

# விநாயகரை வழிபட்டுப் பயன்பெற்றவர்

1. நம்பியாண்டார் நம்பி.
2. அவ்வையார்.
3. கபில முனிவர்.
4. அகத்தியர்.
5. இந்திரன்.
6. திரிமூர்த்திகள்.
7. சோம காந்த மகாராஜா.
8. முருகப் பெருமான்.

மற்றும் பலர்.

# அருட்சக்தி அன்னையார்

அருளே வடிவமாய் அவனியில் தோன்றிய சுந்தர மூர்த்தி சுவாமிகள் திருவருள் பெற்ற திருவெண்ணெய் நல்லூருக்கு 4 மைல் தொலைவில் உள்ள திருச்சாத்தனூரில், அருள் வாழ்வாற்றிய திரு முத்து வீரராகவ ரெட்டியார், அவர் மனைவியார் திருமதி குயிலம்மையார் எனும் இருவரும் புரிந்த மாபெரும் தவப் பயனால் 'சொர்ணம்' என்னும் திருப்பெயரோடு நம் அன்னையார் அவதரித்தனர்.

இளம் வயதிலேயே தெய்வபக்தி, அருட்பண்பு, பலர்க்கும் உதவும் மனப்பக்குவம் இவை அமைந்து விளங்கினர். தம் தந்தையார் இறையடியடைந்ததால் பாட்டியார் ஊராகிய பாக்கத்தில் தம் அன்னையாருடன் சென்று தங்கினர். அங்குப் பள்ளியிற் பயில்கையில், ஆசிரியர் தரும் கணக்குகள் புரியாவிடில், :அவ்வூரிலுள்ள சக்தி கோயிலுக்குச் சென்று அம்மனிடம் விண்ணப்பித்துத் தெளிவு பெறுவர். வீட்டிற்கும் பள்ளிக்கும் ஒளி விளக்காகத் திகழ்ந்தனர். பல பெரியோர்களின் அருளாசிகட்கு உரியவராயினர். விரதங்கள் பல பேணினர்.

பிள்ளையார் குப்பம் திரு பாபுரெட்டியாரின் திருமகனார் திரு. வெங்கடபதி ரெட்டியாரைத் திருமணம் செய்து கொண்டனர். இவர்க்குத் திருவருள் துணையால் முத்து கொண்டாரெட்டியார் என்னும் திருமகன் பிறந்தார்.

நம் அன்னையார்க்குச் சற்குரு நாட்டம் தோன்றியது. தமையனார் திரு. முத்துராம ரெட்டியார் தம் குருநாதராக ஏற்று வழிபட்டு வந்த ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளை, தாமும் குருபரராக ஏற்று, அருட்சட்ட நெறியில் ஈடுபட்டனர். மிகவும் தீவிரமாக அனுஷ்டித்தனர். குருநாதரை தரிசித்து தம் இல்லத்திற்கு அழைத்து வந்து மிக மிகப் பரிவுடன் சேவை புரிந்து அவரது மாபெருங் கருணைக்கு உரியவராயினர்.

விநாயகப் பெருமான் திருவருள் துணையால், விநாயகரே நம் குருநாதராகத் தோன்றியுள்ளார் என்னும் உண்மையை உணர்ந்தார். நாள்தோறும் காலை, மதியம், மாலை ஆகிய மூன்று வேளைகளிலும் மொத்தம் ஆறுமணி நேரம் ஒருவரும் அறியாவண்ணம் அருள்நிட்டை பேணி உயர்நிலை அடைந்தனர். உபவாசங்களை மிக மிகத் தீவிரமான முறையில் கடைப்பிடித்து அருள்நிலையிற் சிறந்து விளங்கினர். அருட் சட்டத்திற்குச் 'சட்டாம் பிள்ளை' என ஆண்டவர் திருவாக்கால் அருளாசி பெற்றுத் திகழ்ந்தனர்.

உடல் பொருள் ஆவி அனைத்தையும் குருபெருமான் திருவடி மலரில் உண்மையன்புடன் ஒப்படைத்து அருள் வாழ்வாற்றி அருள்மயமாகப் பொலிந்தனர்.

சற்குரு அருளால் ஏற்பட்ட குறிப்புணர்ந்து அருள் துணை பற்றி நிர்விகற்பத்தில் ஆழ்ந்தனர். மாதக் கணக்கில், ஆண்டு கணக்கில், பலமுறை இடைவிடாது அருந்தவம் பேணி மெய்ஞ் ஞானப் பிழம்பாகப் பொலிந்தனர்.

அருட்சட்ட அடியவர் பலர்க்கும் கிடைத்த அருட் களஞ்சியமாக, குறையெலாம் தவிர்த்து நலமெலாம் நிறைவிக்கும் நற்பெருந்தாயாக விளங்கி, ஐயமெலாம் தவிர்த்தருளி, அருள்ஞான வாழ்வருளி விளங்கலாயினர்.

அவர்கள், அடியார்களுக்கு அருள்நலம் விளைத்தற் பொருட்டு நிகழ்த்தியுள்ள அற்புதங்கள் அநேக ஆயிர மாகும். 13-8-1980 ஆடிப் பூரத்திருநாளில் அருளடக்க மாகித் திருக்கோயில் கொண்டு எழுந்தருளிய பின்பும் அவர்கள் ஆற்றிவரும் அருளற்புதங்கள் எண்ணற்றன வாகும்.

"அன்னையின் பெருமை அறிந்தோன் யாரொருவன்
பின்னையொருவரும் புகழை யறிந்திலார்
மன்னுவுதித்திடினும் மகிமை யுதித்திடா
மாத்திலா சவரமெனும் மாசிலாத் திலகத்தின்
மகிமைத் திருவடி மனதில்வைத்து மாபூசை செய்திட
துன்பமகன்று தூய்மை பெருகி துலங்கும் ஞாயிறுபோல்"

[சவரன்—பவுன்] [ஞாயிறு—சூரியன்]

# விடியல் நீராட்டம்

ஆண்டவர் ஏற்படுத்திய சட்டம் விடியல் நீராட்டத்தைத்தான் அஸ்திவாரமாகக் கொண்டது. எப்படி அஸ்திவாரம் நன்கு இருந்தால்தான் எத்தனை மாடியுள்ள கட்டிடமும் நீடித்து நிலைத்து நிற்குமோ, அப்படி சுவாமிகளது சட்டத்தில் ஆண்களும் பெண்களும் அதிகாலை நான்கு மணிக்குப் பச்சை நீரில் தலையும் நனைய நீராட வேண்டும் என்பது சுவாமிகளின் கண்டிப்பான கட்டளையாகும்.

நீராடுவதற்கு ஊற்று நீர் ஆற்று நீர் இவை கிடைத்தால் சிறப்பே. கிடைக்காவிடில், குளத்திலோ, கிணற்றிலோ அழுக்கில்லாத தண்ணீர் கிடைத்தால் அதில் நீராடலாம்.

விடியல் நேரத்தில் தண்ணீர் கங்கை நீரின் தன்மையைப் பெற்றிருக்கிறது. ஆதலால் அதிகாலை நான்கு மணிமுதல் நாலரை மணிக்குள் பச்சைத் தண்ணீரில் நீராடவேண்டும் என்பது மிகவும் முக்கியம். உடம்பிலுள்ள பிணிகள் நீங்கி,மேலும் ஏதும் நோய் அணுகாமலிருப்பதற்கு இவ்விடியல் நீராட்டம் மிகவும் உதவுகிறது. உலகப் பேரறிஞர்களும் இதை ஒப்புக் கொண்டுள்ளனர்.

விடியல் நேரத்தில் தண்ணீர் கிடைக்காவிடின் முதல் நாள் இரவே தனியாகப் பிடித்து வைத்துக் கொண்டு அதில் ஆண்டவர் திருநீறு சிறிது இட்டு அவரருளில் நீராடுகிறோம் என்ற எண்ணத்துடன் குளிப்பதால் தவறில்லை, என திரு அருட்சக்தி அன்னை அவர்கள் அருளியுள்ளார்கள். நாள்தோறும் தவறாது காலை நான்கு மணிக்கு நீராடுபவர்களே சட்டத்தின் எல்லா நன்மைகளையும் அடைவதற்குத் தகுதி உடையவர்கள் ஆவார்கள். காலை 4 மணிமுதல் 4¼ மணிக்குள் நீராடுபவர்கள் முதல் நிலையிலும், 4½ மணிக்குள் நீராடுபவர்கள்

இரண்டாவது நிலையிலும் தேறியவர்கள் ஆவார்கள் என்பது திரு தாயவர்களின் கருத்து.

காலந்தவறுது முறைப்படி நீராடுபவர்களுக்கு நோய்கள் வாரா. உள்ள நோய்கள் விலகும். நாடி நரம்புகள் முறுக்கேறும், மூளை கூர்மையுறும், இரத்தம் தூய்மை அடையும். உடலுக்கு ஆரோக்யம் உண்டாகும். புத்துணர்ச்சி உண்டாகும். தெய்வீக சக்தி வளரும், மனம் அமைதியுறும். இவ்வாறு காலந்தவருது முறைப்படி நீராட்டத்தைக் கடைப்பிடிப்பவர்கள் படிப்படியாக சட்ட நெறியின் பகுதிகள் அனைத்தையும் பேணி ஆண்டவர் அருளால் மேல்நிலை அடையத் தகுதி உடையவர்கள் ஆவார்கள். அவர்கள் முயற்சியும் வைராக்கியமும் உடையவர்களாய்த் திருவருளை நாடி நிட்டை புரிந்து வருவார்களானுல், அருள் நிலையில் உயர்ந்து பிறவிக் கடலைக் கடந்து கரை சேர்வது நிச்சயம். நம் அருள் சக்தி அன்னை அவர்கள், தாமே இவ்வாறு நியமத்துடன் நடந்து நமக்கெல்லாம் வழிகாட்டி யுள்ளார்கள்.

காக்கை, குருவி முதலிய பறவைகள் அதிகாலையில் துயில் விழித்துக் கொள்கின்றன. நீருள்ள இடத்திற்குச் சென்று தலையையும் நனைத்து குளித்து புத்துணர்ச்சி பெறுகின்றன. யானை நீருள்ள இடத்திற்குச் சென்றதும் தும்பிக்கையால் நீரை எடுத்துத் தலையிலும் உடம்பிலும் ஊற்றிக் கொண்டு தூய்மை செய்து கொள்கிறது. அவை களைப் பார்த்தாவது காலை நீராட்டத்தின் சிறப்பை நாம் புரிந்து கொள்ளலாம்.

சட்ட அடியார்கள் அனைவரும் அதிகாலை நான்கு மணிக்குக் கட்டர்யமாகப் பச்சை நீரில் முழுக வேண்டியது மிகவும் முக்கியம். அவ்வாறு நடவாமல் காலந்தாழ்த்தி நீராடி தமக்குப் பூர்ணபலன் கிடைககவில்லையே என்று கூறுவது அறியாமை. நமக்கு ஐயம் ஏற்படும் போது அருட் சட்டத்தில் தீவிரமாக. உறுதியாக, வைராக்கியமாக நடக்கும் அடியார்களை நாடி அவர்கள் கூறும்வழி முறைகளை ஒழுங்காகக் கடைப்பிடித்து நன்மை பெறலாம்.

தீவிரமான அடியார்களை நேரில் சந்திக்கும் வாய்ப்பு கிடைக்காவிடின், கடிதமூலம் தொடர்பு கொண்டு பதில் பெற்று நலம் அடையலாம்.

பெண்கள் மாதவிடாய் ஆனபோதும் பச்சை நீரில் காலத்தில் நீராடி திருநீறு, திலகம் அணிந்து, தீர்த்தம் பருக வேண்டியது அவசியம். விநாயகரைப் பிரதக்ஷணம் செய்ய இயலாது. ஆதலால் மனமுருகி நினைத்து வழிபட்டுப் போற்ற வேண்டும்.

## வெந்நீர் வேண்டாம்

குடிப்பதற்கோ, குளிப்பதற்கோ பச்சை நீரைத்தான் பயன்படுத்த வேண்டுமேயன்றி, எக்காரணங்கொண்டும் வெந்நீரைப் பயன்படுத்தலாகாது, நோய் வந்தபோதும் தண்ணீரையே உபயோகிக்க வேண்டும். அச்சமாக இருப்பின், ஆண்டவர் அருளை நினைந்து ஆண்டவர் திருநீறு சிறிது இட்டுக் குளிக்கலாம், பருகலாம்.

நீரைக் காய்ச்சுவதால் அதில் உள்ள இயற்கைச் சக்தி அழிந்து விடுகிறது. உலகிலுள்ள உயிர்களும், பயிர் வகைகளும் தண்ணீரினுல் தான் இனிது வாழ்கின்றன. வெந்நீர் விட்டால் எந்தப் பயிரினமும், ஏனைத்தாவர வகைகளும் உயிர்வாழமாட்டா. இயற்கையை நோக்கினுல் உலகை வாழவைக்கும் மழையே இறை திருவருளால் தண்ணீராகத்தான் பொழிகிறது. பரந்து விரிந்த ஆழ்கடல் பச்சைத் தண்ணீராக இருப்பதால்தான், அதில் எண்ணற்ற உயிர்கள் வாழமுடிகிறது. உதகமண்டலம் போன்ற குளிர் பிரதேசங்களில் கூட வெந்நீரைப் பயன்படுத்தக் கூடாது; பயன்படுத்துவது குற்றம், மேலும் எந்த ஆலயத்திலும் இறைவனுக்குத் திருமஞ்சனம் செய்கையில் தண்ணீரைப் பயன்படுத்துவதைக் காண்கிறோம். ஆதலால் தண்ணீரின் பெருமையைக் கண்கூடாகக் கண்டு உணர்கிறோம்.

எண்ணெய் தேய்த்துக் கொண்டாலும், தண்ணீரையே பயன்படுத்த வேண்டும். எண்ணெயையோ, தண்ணீரையோ, சிகைக்காயையோ காய்ச்சுதல் கூடாது. வேறு பொருள்களைச் சேர்ப்பதும் கூடாது.

# வழிபாடு, திருநீறு தீர்த்தம்

நீராடி முடிந்தவுடன், நாள்தோறும் தவருமல் விநாயகர் கோயிலுக்குச் சென்று மூன்று முறை வலம் வந்து வணங்கி வழிபடவேண்டும். தனக்கு வேண்டிய நலங்களை அருளும்படி வேண்டி முறையிட்டுப் பயன் பெறலாம். அந்தந்த சமயத்தவர்கள் அவரவர்கட்குரிய முறைப்படி வழிபாடு நடத்திப் பயன் பெறலாம்.

வீட்டில் விநாயகரை வைத்துப் பூசிக்கும் வழக்க முடையவர்கள் அம்மூர்த்தியை வலம்வந்து வழிபடலாம். மூர்த்தி கற்சிலையாக இருந்தால், நாள்தோறும் அபிஷேகம் செய்தல் வேண்டும். நாள்தோறும் தண்ணீர் மட்டுமாவது அபிஷேகம் செய்யவேண்டும். வாய்ப்பு இருந்தால் பால் அபிடேகமும் செய்யலாம். விசேட நாட்களில் முக்கியமாக வெள்ளிக்கிழமைகளில் அபிடேகப் பொருள்கள் முறைப்படி உபயோகித்து அபிடேகிக்கலாம். அபிடேகம் முடிந்ததும் உலர்ந்த வஸ்திரத்தால் மூர்த்தியைத் துடைத்து தூய வஸ்திரம் சாத்தி, திலகமிட்டு, மலரிட்டு, தூயதீபம் காட்டி நைவேத்தியம் படைத்துக் கற்பூரம் காட்டி மூன்று முறை வலம்வந்து துதிபாடி வணங்கி வழிபடலாம்.

மூர்த்தி உலோகச் சிலையாயின் வெள்ளிக்கிழமை களிலும், மற்றும் விசேட நாட்களிலும் அபிடேகம் செய்தல் போதுமானது, மலர் அணிவித்தல், நை வேத்தியம் படைத்தல் முதலியன செய்து வலம் வந்து வழிபடலாம்.

சூழ்நிலை காரணமாகக் காலையில் வலம்வர இயலா விடின் மாலைக்குள் விநாயகர் கோயில் உள்ள இடம் நாடிச் சென்று வலம்வந்து வணங்கி வழிபட வேண்டியது அவசியம். தினமும் காலை பூஜைக்குப்பின், அல்லது படுக்கைக்குப் போகுமுன் நம் குறைகளை எல்லாம் குரு நாதரிடம் கூறிக்கொள்ளலாம். அதுநமக்கு மனநிம்ம தியைத்தரும். பயனும் உண்டாகும்.

ஆனல் பேராசை காரணமாகப் பல வேண்டுதல்களைச் செய்யக்கூடாது.

வழிபாடு முடிந்ததும் தண்ணீரில் திருநீறும், துளசியும் இட்டு அருள் தீர்த்தம் அருந்தவேண்டும். குருநாதரையே இறைவனுகக் கருதி வழிபட்டும் பயன்பெறலாம். நம் வீட்டிலோ அல்லது உறவினர்களோ இறந்துவிட்டாலும் அதற்காகக் காலை நீராட்டத்தை விடக்கூடாது. நேரம் தவருமல் நீராடி பூஜைசெய்து தீர்த்தம் பருக வேண்டும். தீட்டு என்று எண்ணுமல் பூஜை செய்யலாம்; உயர்ந்த பக்திக்குத் தீட்டு என்பதே கிடையாது.

# ஒரு தெய்வக் கொள்கை

உலகெலாம் உண்டாக்கிக் காத்தருளும் பரம் பொருள் ஒன்றே. அதுவே பல காலங்களில் பல அடியார்களுக்கு அருள் பாலிக்கவும், அதர்மத்தை அழித்துத் தர்மத்தை நிலநாட்டவும் அந்தந்த சூழ்நிலைக்கேற்ப பல திருப்பெயரும் திருவுருவும் தாங்கி வந்து அருட்செயல்கள் புரிந்திருப்ப தாக வரலாறுகள் நமக்கு அறிவுறுத்துகின்றன. அதற் கேற்ற முறையில் திருத்தலங்களும், திருக்கோயில்களும், அருள்மூர்த்திகளும் ஆங்காங்கு அமைந்து அடியவர்களின் கோரிக்கைகளை நிறைவேற்றி அருள் நலங்கள் விளைத்த வண்ணம் திகழ்கின்றன. அம்மூர்த்திகளுள் உயர்வு தாழ்வு நினைப்பதோ, கூறுவதோ, தாம் வணங்கும் தெய்வத் திருவுருவத்தைத் தவிர மற்ற உருவங்களை, சமயங்களை, வழிபாட்டு முறைகளை நிந்திப்பதோ அணுவளவும் கூடாது.

கடவுளை யார் யார் எந்த இடத்தில் எந்த உருவத்தில் பூர்ண நம்பிக்கையுடன் துதித்து வழிபடுகிறுர்களோ அந்த அந்த இடத்தில் அந்த அந்த உருவத்தில் எங்கும் நிறைந்த பரம்பொருள் தோன்றி அருள் பாலிக்கிறுர். அதனுல் நன்மை அடைந்த அடியவர் அம் மூர்த்தியே உயர் வுடையவர் என்று முழுமையாக நம்பி வழிபட்டு முழுப் பயன் பெறுகிறுர்.

எனவே அடியவர்கள் பரம்பொருள் ஒன்றே என்ற முழு நம்பிக்கையுடன் ஒரே உருவத்தை வழிபட்டு மனம்,

வாக்கு, காயங்களால் தொண்டு புரிந்து பூர்ண பலன் அடைய வேண்டும். பல கோயில்களுக்குச் சென்று வழிபடுவதோ, பல கொள்கைகளை நாடி உழல்வதோ கூடாது. பல கோயில்களுக்குச் சென்றால், மனம் ஒரு நிலைப்படாமல், அலைவுறும்; மேல்நிலையடைய முடியாது.

## புலால் உண்ணாமை

எல்லா உயிர்களுக்குள்ளும் ஆண்டவன் குடிகொண்டுள்ளான் என்பது நம் முன்னோர்களாகிய அருளாளர்கள் அநுபவத்தால் உணர்ந்து உணர்த்திய பேருண்மையாகும். எந்த உயிரையும் நம்மால் படைக்க இயலாது. இறைவனால் படைக்கப் பெற்ற எந்த உயிர்களுக்கும் தீங்கு விளைக்கவோ கொல்லவோ நமக்கு அதிகாரம் இல்லை. "கொலையும் புலையும் தவிர்" "நோன்பென்பது கொன்று தின்னாமை" என்பன அவ்வைப் பிராட்டியின் அருள்வாக்கு.

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி;
எல்லா உயிரும் தொழும்—என்பது திருக்குறள்.

"கொல்லான் புலால்களையும் மறுத்தாரே—மோகம்
வெறுத்தாரே; பாசம் அறுத்தாரே—கரம்குவித்து
உயிர்களெல்லாம் துதித்தாரே" —என்பதும்

"பச்சிலைஎன்றும் பறிக்கத் துணியாதே
சச்சிதானந்தம் என்றுருந் தெரிந்திலர்"

என்பதும் நம் குருபெருமான் அருள்வாக்கு. பிற உயிர்களைக் கொன்று தின்று உயிர்வாழ நினைப்பது அறியாமையிலும் அறியாமையாகும். தாமே கொல்லாவிட்டாலும், கொன்ற புலால் உண்பவனுக்கும் அந்த உயிர்க்கொலையால் வரும் பாவத்தில் முழுப்பங்கு உண்டு என்பதை உணர வேண்டும்.

முஸ்லீம் மதத்தினரும் ரம்ஜான் நோன்பில் முப்பது நாளைக்குப் புலால் உண்பதில்லை. கிறித்தவர்களும் ஈஸ்டர் போன்ற விரத நாட்களில் புலால் உண்பதில்லை என்பது உணரத்தக்கது.

# பஞ்சமா பாதகம் தவிர்த்தல்

பொய், கொலை, களவு, கள், காமம் என்ற பஞ்சமா பாதகங்களில் மிகக் கொடியது உயிர்க்கொலை. ஆதலால் ஆன்ம முன்னேற்றம் வேண்டுபவர்கள் மரக்கறி உணவையே உட்கொள்ள வேண்டும். மரக்கறி உணவு உண்பவனிடம் சத்வகுணம் மேலோங்கி, சாந்தம், அன்பு, பக்தி, பொறுமை, நல்லெண்ணம், கூர்ந்த அறிவு, அடக்கம், ஜீவகாருண்ணியம், வைராக்கியம், தயை, தரும சிந்தனை, பிறவாநெறியை அடைவதற்குரிய மனப்பக்குவம் எல்லாம் அமையும்.

பொய் பேசுவதனுல் பாவம் விளையும். பொய் பேசும் ஒருவன் உண்மைப் பொருளாகிய இறைவனை அடைய முடியாது.

கள் முதலிய போதைப் பொருள்களை அருந்தும் பழக்கம் உடையவன் தானும் அழிந்து, தன் குடும்பத்திற்கும் அழிவு தேடுகிருன்.

சட்டத்தில் உள்ளவர்கள் லாகிரி வஸ்துக்களாகிய புகையிலை, பீடி, சிகரெட்டு முதலிய பொருள்களைப் பயன் படுத்தக் கூடாது. முன்னர் இருந்த பழக்கத்தை விட முடியவில்லையானுல் மன உறுதியுடன் ஆண்டவரிடம் உருகி முறையிட வேண்டும். ஆண்டவர் அருளால் தடுப்பு ஏற்படும். நாளடைவில் அத்தீய பழக்கங்கள் தாமே விலகி விடும்.

காம வயப்படலாகாது என்பது உலக இச்சைகளில் அளவின்றி ஈடுபடலாகாது என்பதாகும்.

களவு என்பது நமக்கு உரிமையல்லாத பிறர் பொருளை அவர்கள் அறியாமல் அபகரித்துக் கொள்வது ஆகும். இது கூடாது.

நிற்க, பஞ்சமா பாதகங்கள் ஒன்ருேடொன்று தொடர்புடையவை. இவற்றில் ஒரு தீய பழக்கம் ஒருவனிடம் படிந்துவிட்டாலும் மற்றவற்றிற்கும் அது அவனை அடிமை யாக்கிவிடும். ஆதலால் இவை ஐந்தில் எதனையும் சட்ட அடியவர்கள் மறந்தும் கைக்கொள்ளக் கூடாது.

# ஆசைகள் தவிர்த்தல்

உலகில் வாழும் உயிர்கள் அனைத்தும் ஆசை வயப் பட்டிருக்கின்றன. மற்ற உயிர்களை விட மனிதன் மட்டுமே நீண்ட கால வாழ்வுக்கு வேண்டியவற்றைத் தேடுகிறான். தற்போதைக்குத் தேவையானதில் மட்டும் திருப்தி அடைவதில்லை. நிலம், வீடு, மற்றும் பல ஆடம்பரப் பொருள்கள் முதலியவற்றிற்காக ஆசை கொண்டு பேயாக அலைந்து திரிகின்றான்.

இவ்வளவிற்கும் தேவையானது பணம். பணத்தைச் சம்பாதிப்பதற்கு அறிவு, ஆற்றல், உழைப்பு இவை தேவைப்படுகின்றன. இவை எல்லாம் இருந்தால் மட்டும் பணத்தைச் சம்பாதிக்க முடிகிறதா? ஒரு சிலருக்கு முடிய லாம். எல்லோருக்கும் முடிகிறதில்லை, ஏன்? அதுதான் நம்முடைய நல்வினை, தீவினையின் பயன்.

முயற்சி பயனளிக்காதபோது ஒரு சிலர் கடவுளை நாடுகின்றனர். அவனருளால் சிலசமயம் நினைத்தது நடந்து வெற்றி கிட்டுகின்றது. ஆசைப்படுவதெல்லாம் நிறைவேறுவதில்லை. காரணம், ஆசைக்கு அளவே இல்லை.

அவனவன் செய்த வினைக்கேற்றவாறு இன்ப துன்பங்களை அநுபவிக்கிறான். ஆசையை நிறைவேற்றிக் கொள்ளப் பஞ்சமா பாதகங்களைச் செய்கிறான். அதனால் துன்பத்துக் குள்ளாகிறான்.

“ஆசைப் பிசாசைத் துரத்து; ஐயனடியை அனுதினம் நெஞ்சில் நிறுத்து” என்பது நம் குருபெருமானின் அருள் வாக்கு.

எத்தனையோ கோடிப் பிறவிகளில் செய்த நல்வினைப் பயனாக இம்மனிதப் பிறவி கிடைக்கிறது. அப்படித் தோன்றிய மனிதர்களில் ஒரு சிலருக்கு மட்டும் தெய்வ நம்பிக்கை உண்டாகிறது. நம்மையும் நாம் காணும் அனைத்துப் பொருள்களையும் படைத்தவன் ஒருவன் இருக் கின்றான். அவன் எல்லாம் வல்லவன். அவனருள் பெற்ற வர்களிடம் நாடி நமக்குத் தேவையானவற்றைப் பெற்றுக்

கொள்ளலாம் என எண்ணுகிறுன். அப்படி எண்ணுபவர் களில் நூற்றில் ஒருவன்தான் ஆசைகளை வென்று இறைவனை அடைவதற்கு முயல்கிறுன்.

எல்லா ஆசைகளையும் கட்டுப்படுத்தி, அவனை அடையவேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு, செய்யும் செயல்களை எல்லாம் அவனருளால் செய்து, பயனை அவனுக்கே அர்ப்பணித்து வாழ்கின்றவன் வாழ்வில் இன்பத்தைக் காணலாம். அத்தகையவரே இறைவனுடன் இரண்டறக் கலந்து முத்தி பெற இயலும். இந்த உண்மை யையே எல்லா வேத சாஸ்திரங்களும் நமக்குப் போதிக் கின்றன.

"ஆசை ஒழித்துவிடு, அபிமானம் விட்டுவிடு,
பாசமொழித்து விட்டால்—ஏ குயிலே
பரமபதம் சேரலாமே."

என்று இந்தப் பேருண்மையை ஆண்டவர் தம் அருட் பாடலில் விளக்கியுள்ளார்.

## வெள்ளி விரதம்

உயிர் வாழ்விற்கு உணவு அவசியம் ஆகிறது' உணவை முறைப்படுத்தி, கால மறிந்து' பசி நிலை அறிந்து. அளவோடு அருந்துவோன் நீடித்து ஆரோக்கியமாக வாழ முடியும். நாள்தோறும் தொடர்ந்து உழைத்துவரும் உடம்பின் கருவிகரணங்களுக்கு வாரத்தில் ஒரு நாளாவது சற்று ஓய்வு அளிப்பது அவசியம் ஆகும்.

ஆசைகளில், உணவைப் பற்றிய ஆசை உயிர்களுக்கு முதன்மையாக உள்ளது. ஆசைகளை வென்ருல்தான், இறைவனை அடைய முடியும் என்பது ஆன்ரோர் கருத்து. "காப்பது விரதம்" என்பது அவ்வைப்பிராட்டியின் அருள் மொழி. ஆசைகளில் இருந்து கொஞ்சம் கொஞ்சமாக விடுபட்டு நம்மைக் காப்பாற்றிக் கொள்ளவே விரதத்தை அனுட்டிக்கிறோம்.

எல்லாச் சமயங்களும் விரதத்தை முக்கியமாகப் பேண வேண்டும் என்று போதிக்கின்றன. பசியைப் பொறுக்கும் ஒருவன் எதையும் செய்து முடிக்கக்கூடிய ஆற்றலை படிப் படியாகப் பெறுகின்ருன். வாரத்திற்கு ஒருநாளாவது விரதம் பேணுவது உடலுக்கும் உயிருக்கும் நலம் விளைக்கும் நற்செயலாகும். ஏதும் அருந்தாமல் முழு உபவாசம் இருக்க முடிந்தால் அது மிகவும் நலம். சாதாரண மக்கள்கூட 'இன்று ஒருபொழுது' என்று கூறுவது வழக்கம், அதாவது ஒருவேளை உணவு மட்டும் கொள்ள வேண்டும் என்பது அதன் பொருள், இயலாத வர்கள் ஒருவேளை உணவோடோ, அல்லது ஒருவேளை பலகாரத்தோடோ ஒரு வேளை அன்னமும் ஒரு வேளை பலகாரமுமோ அல்லது பால், பழமோ, அல்லது பால் மட்டுமோ புசித்து இறைஅருள் நாட்டத்துடன் இருந்து நலம் பெறலாம், "வேத விதிகள் தொடர் பாவந்தொலையு மென்று விரதத்தைக் கோரடி மனமே" என்பது ஆண்டவர் அருட்பாடல். இரவில் பலகாரம் சாப்பிடாமல் இருப்பது நல்லது.

சைவ வைணவ சமயங்களும், மற்றும் இஸ்லாமிய கிரித்தவ மதங்களும் வெள்ளிக்கிழமையை சிறப்பாகப் போற்றுவதால், நம் குருபெருமான் வெள்ளிக்கிழமை தோறும் விரதம் பேணவேண்டும் என அருட்சட்டத்தில் அமைந்துள்ளனர்.

அதிதீவிரப் பக்குவமுள்ள அடியவர்களுக்கு அவரவர்கள் நிலைக்கேற்பப் பலவிதமான உபவாச முறைகளை உள்ளிருந்து உணர்த்தி, அருள் நிலையில் உயர்ந்து பயன் பெறுமாறு நம் குருபெருமான் அவ்வப் போது அருள்புரிந்து நம்மைப் பேணி வருகிருர்.

விரத நாட்களில் அதிக நேரம் கழித்து உணவு அருந்தினுல் களைப்பு தோன்றலாம். ஆதலால் கூடியவரை காலை நேரத்தில் உணவு உட்கொள்ளுதல் நலம்தரும் பிற்பகலில் களைப்பு தோன்றினுல் பாலோ, மோரோ அல்லது திருநீறு இட்ட தீர்த்தமோ அருந்தலாம்.

விரதம் தொடங்குகையில் எப்படி விரதம் இருப்பது என்று திட்டம் செய்து கொள்ளுகிருமோ, அதிலிருந்து

கீழே நழுவக்கூடாது. மீறினல் குற்றம். இன்று பலகாரம் தான் கிடைத்தது என்றும், அடுத்தவாரம் சாப்பாடு கிடைத்தது என்றும் மாற்றி விரதம் கடைப்பிடித்தால் அது குற்றமாகும். விரத நாட்களில் இடையில் ஏதாவது சாப்பிட்டால் அதுகுற்றமாகும். வைராக்கியமாக இருக்க வேண்டும். நாள் செல்லச் செல்ல சட்டத்தின் முக்கிய பகுதிகளை உறுதியாகக் கடைப்பிடிப்பவர்களுக்கு ஆண்டவர் அருளால் விரதம் மேலும் மேலும் தீவிரமாக்கப் படும். நாமாக எதையும் ஏற்படுத்திக் கொள்ளக்கூடாது. ஆண்டவரே குறிப்புக் கொடுத்து இனிது நடத்திச் செல்வார். அவர் அருட்குறிப்பை நன்கு உணர்ந்து, புரிந்து கொண்டு, அவ்வாறு நடந்துகொண்டால், களைப்போ, சோர்வோ, தளர்ச்சியோ சிறிதும் ஏற்படாது என்பதை அனுபவத்தால் அறியலாம்.

ஆண்டவர் குறிப்பைச் சரியாக உணர்ந்து பொருள் புரிந்துகொள்ள இயலாத சமயங்களில் அருட் சட்டத்தில் தீவிரமாக உள்ளவர்களிடம் கூறிவிளக்கம் தெரிந்து கொண்டு அவ்வாறே நடக்கலாம். நாமாக உபவாசத்தை உயர்த்திக் கொள்ளக்கூடாது. அப்படிச் செய்தால் களைப்பு ஏற்படும், அல்லது தடுப்பு ஏற்படும்.

உபவாசம் என்ருல் (உப—சமீபத்தில், வாசம்—வசிப்பது) ஆண்டவனுக்குச் சமீபத்தில் வசிக்க வகை செய்வதுதான் உபவாசம் ஆகும். ஆதலால் உபவாச நாளில் ஆண்டவரை மறவாமல் அவரருளைப் போற்றிய வண்ணம் இருப்பது அவசியமாகும். உபவாசத்திஞல் உடம்பிலுள்ள பல பிணிகள் நீங்குகின்றன. சத்வகுணம் மேலோங்கி, மனம் தூய்மை பெறுகிறது, பக்தி வளர்ச்சி அடைகிறது.

ஆண்டவர் சட்டத்தில் தீவிர பக்குவம் உடையவர் களுக்கு ஆண்டுதோறும் பல மாதங்கள் கூட தொடர்ந்து உபவாசம் ஏற்படுகிறது. உபவாசத்தை எப்படிச் சமாளிப்பது என்ற அச்சம் ஏற்படாதபடி, ஆண்டவரே அவர்களுக்குத் தெம்பும் தைரியமும் ஊட்டி, உப வாசத்தைச் சரியாகக் கடைப்பிடிக்கத் துணைபுரிகிருர். ஆனல் அதற்கு வைராக்யம் மிகவும் முக்கியம்.

# உபவாசக்காரர்கள் நினைவிற் கொள்ள வேண்டியவை

வெள்ளிக்கிழமை பலகாரம் அருந்துவோரும் நீண்ட நாள் உபவாசம் பேணுவோருப் தக்காளிப் பழம், தேங்காய், பச்சை மிளகாய், கொத்துமல்லித் தழை இவைகளைத் தவிர எந்தக் காய்கறிகளையும் பயன்படுத்தக் கூடாது. மாங்காய் தக்காளிக்காய், வெங்காயம், பூண்டு இவை சேர்க்கக் கூடாது. பழ வகைகள் சேர்த்துக் கொள்ளலாம்.

உபவாசக்காரர்கள் தனியாக உட்கார்ந்து உணவு கொள்ள வேண்டும். மற்றவர்கள் உண்ணுமிடத்தில் சேர்ந்து உட்கார்ந்து உண்ணக்கூடாது. பால்பழம் உண்டாலும் தனியிடத்தில்தான் உண்ண வேண்டும். நீண்ட நேரம் இடைவெளி விட்டு உண்ணுவதால், அவசர மின்றி நிதானமாக அருந்த வேண்டும். உண்ணுமிடத்தில் பரிமாறுவோர் தவிர, மற்ற யாரையும் அனுமதிக்கக் கூடாது. உபவாசக்காரர்கள் உண்ணும் பண்டங்களையும் பிறர் பார்க்கும்படிகொண்டு வருவதோ, வைத்திருப்பதோ, கூடாது. எல்லாவற்றையும் தயார் செய்து மூடி போட்டு வைத்துக் கொண்டு, பிறகு உண்ண அழைக்க வேண்டும். உணவு தயாரிக்கும் போதே, உபவாசக்காரர்களுக்கு முதலில் தனியாகத் தயாரித்தல் அவசியம்.

உண்பதற்கு முன் உண்ணுமிடத்தில் ஒரு எண்ணெய் விளக்கு அணையாமல் இருக்கும்படி ஏற்றிவைத்துக் கொள்ள வேண்டும். காற்று அடிக்கும் இடத்தில் விளக்கை வைக்கக் கூடாது. அங்கு மின்விசிறியை போடக்கூடாது. உண்ணும் போது மணைப் பலகையின் மீதோ அல்லது ஓலைத் தடுக்கின் மீதோ அமர்ந்து உண்ண வேண்டும் வெறும் தரைமீது உட்கார்ந்து உண்ணக் கூடாது. எதுவும் கிடைக்காவிடில், மேல் வேட்டியை மடித்துப் போட்டுக் கொண்டாவது அதன்மீது உட்கார்ந்து உண்ண வேண்டும்.

நிவேதனம் செய்த உணவு, பலகாரம், பழங்கள், இவை உண்பதற்கு ஒரு சிலர்க்குத் தடைஏற்படும். அதை

அறிந்து அதற்கேற்றவாறு நடக்க வேண்டும். பொதுவாகவே யாரும் உணவருந்தும் இடத்தில் மற்றவர்கள் செல்வது தவறு, விரதக்காரர் உண்ணும் பண்டங்களை மற்றவர்கள் பார்த்து 'இப்படியுமா உண்பார்கள்' 'எப்படி இவை போதும்', என்றும் பிறவகையிலும் எண்ணக்கூடும். அதனால் திருஷ்டி தோஷம் ஏற்படும். திருஷ்டி பொல்லாதது அதைப் போக்குவது மிகவும் கடினம். ஆதலால் உபவாசக்காரர்கள் மறைவான இடத்தில் அமர்ந்து உணவு கொள்ள வேண்டும் என்பது மிகவும் அவசியம்.

உண்ணும்போது மத்தியில் எழுந்திருக்கக்கூடாது. பால் அருந்தும்போது கூட இடையில் எழுந்திருக்கக் கூடாது. எழுந்துவிட்டால் பிறகு அதைச்சாப்பிடக் கூடாது. உண்ணும்போது எழுந்துவிட்டால், உண்டு முடிந்து விட்டது என்றாகும். மறுபடியும் அமர்ந்து உண்டால் இரண்டாவது முறை சாப்பிடுவது போல் ஆகும். ஒருமுறைதான் சாப்பிடவேண்டும் என்பது விதி. விளக்கு அணைந்தால் பிறகு உண்ணக் கூடாது. மின் விளக்கை நம்பி உணவு கொள்ளக்கூடாது. திடீரென அணைந்துவிடக் கூடும். தனியாக ஒரு எண்ணெய் விளக்கை வைத்துக் கொண்டு உண்ண வேண்டும், அல்லது, மெழுகுவர்த்தியாவது, காற்றில்லாத இடத்தில் ஏற்றிவைத்துக் கொண்டு உண்ண வேண்டும்.

உபவாசக்காரர்கள் தம்முடைய ஆகார நியமத்தைப் பற்றி யாரிடமும் எதுவும் சொல்லக் கூடாது. அப்படி சொல்லிக் கொண்டாடல் சிரமம் ஏற்படும். கேட்பவர்களிடம் சாப்பிட்டாயிற்று என்று மட்டும் கூறிவிட வேண்டும்.

பொதுவாக எவரிடமும் தன்னுடைய வழிகளையோ, உடல்நலக் குறைகளையோ, நடக்கும் முறைகளையோ எதையும் கூறக்கூடாது. பிறர் கூறும் அறிவுரைகள் எதையும் ஏற்றுக் கொள்ளக் கூடாது. இடையில் ஏதேனும் பசி, களைப்பு முதலியன தோன்றினால் கொஞ்சம் தண்ணீரில் ஆண்டவர் திருநீறு சிறிது இட்டு அருந்தினால் அவரருளால் களைப்பு நீங்கிவிடும். அடியவர்களிடத்தில் எப்போதும் ஆண்டவர் திருநீறு கைவசம் இருக்க வேண்டும்

நாவிற்குச் சுவையாக உள்ளதெல்லாம் வயிற்றுக்கு ஆவதில்லை. வயது முதிர்ச்சி அடைகையில் ஜீரண சக்தி குறைகிறது; எவரும் அளவோடு உண்பது எப்போதும் நல்லது. 'அளவுக்கு மீறினால் அமுதமும் விஷம்' என்பது பழமொழி. நாக்கு என்னும் புலனை அடக்கப் பயில்வது உபவாசத்தின் குறிக்கோள்களில் ஒன்று. 'ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல்,' பசி பொறுப்பது பெருந்தவம், படிப் படியாகப் புலன்களை அடக்கி உய்வு பெற உபவாசம் வழிகாட்டும்.

சாத்வீக உணவால் பக்தி, வைராக்கியம், அடக்கம், தயை, ஜீவகாருண்யம், அன்பு, மனத் தூய்மை, சினமின்மை, பொய் சொல்லாமை, தரும சிந்தனை, காம உணர்வின்மை, கடவுளிடத்தில் பூர்ண நம்பிக்கை ஆகிய நற்குணங்கள் வளர்ச்சி அடையும். மித ஆகாரம், மித வார்த்தை மித நித்திரை, இவற்றை முக்கியமாகக் கடைப் பிடிக்க வேண்டும்.

உபவாச காலங்களில் அதிக வேலையோ, உடல் உழைப்போ, அலைச்சலோ வைத்துக் கொள்ளக் கூடாது. பக்குவமாக இருக்கவேண்டும்.

## மருந்து அருந்தாமை

"வினையினால் ஜெனிக்கும் இத்தேகம்" என்பது ஆண்டவர் அருள்வாக்கு, நமது முன் வினைப்பயனால் பிறவி எடுக்கிறோம். இப்பிறவியில் முன்னைவினையைத் தொலைத்துக் கொள்வதே நோக்கமாய் இருக்க வேண்டும். நாம் செய்த தீவினைப் பயனால் நமக்கு நோய் வருகிறது. அதை அனுபவித்துத்தான் தீர்க்க வேண்டும், இன்றேல் அது அடுத்த பிறவியிலும் தொடரும். ஆதலால் நோயைத் தடுக்க மருந்து அருந்துவது கூடாது என்பது சுவாமி களின் கருத்து.

"தீராநோய் தீர்த்தருள வல்லான் கண்டாய்" என்பது அப்பர் பிரானின் அருள்மொழி. எல்லாம் வல்ல பரம் பொருளை வைத்திய நாதன் என்று போற்றி வழிபடும் நாம், உடற்பிணிகளையும், தீர்ப்பதற்கரிய பிறவிப் பிணியையும்

அவனருள் கொண்டே தீர்த்துக் கொள்ள முயல்வதுதான் மேலான நெறியாகும். அவ்வாறின்றி, ஒரு மருத்துவனை, ஒரு மருந்தை நாடி, நோய் தீர்த்துக்கொள்ள முயல்வது அறியாமையாகும் என்பது ஆண்டவர் அறிவுரை.

நோயுற்றபோது காலை மாலை இருவேளையும் காலந் தவருமல் நீராட வேண்டும். இரு வேளை நீராடி, திருநீ றணிந்து, திருநீறும் துளசியும் இட்ட தீர்த்தம் பருகி, ஆண்டவரை மனமுருகி வேண்டியும், ஆண்டவர் திருநாமத்தை மனனம் செய்தும், அவருடைய அருட் பாடல்களைப் பாராயணம் செய்தும் வழிபட்டுப் போற்று வதனுல் நிச்சயமாக நோய் நீக்கம் பெறலாம்.

நோய் மிகவும் கடுமையாயின் ஆண்டவரைக் கொலு அமர்த்தி வழிபட்டுப் பயன் பெறலாம்.

*[கொலு அமர்த்தும் முறை பின்னர் பார்க்க]*

### ஜுரம்

ஜலதோஷம், ஆகாரக் கோளாறு, அஜீரணம் போன்ற காரணங்களால் ஜுரம் வந்தால், இரண்டு வேளை நீராடி, திருநீறணிந்து, தீர்த்தம் பருகி, விநாயகரை வழிபட்டுப் போற்றினுல், ஜுரம் நீங்கிவிடும். பொதுவாக எல்லா ஜுரங்களுக்கும் புழுங்கலரிசி கஞ்சி சாப்பிடுவது நல்லது. கபம் இல்லையேல் கஞ்சியில் மோர், பால், இரண்டில் ஒன்றைச் சேர்த்துக் கொள்ளலாம். கபம் இருந்தால் பால் சேர்க்க வேண்டாம். சாத்துக்குடி சேர்த்துக்கொள்ளலாம்.

### டைபாயிடு ஜுரம்

காய்ச்சல் தொடர்ந்து இருக்கும். இந்த ஜுரத்திற்குப் பார்லி கஞ்சி கொடுக்க வேண்டும். சாத்துக்குடிச் சாற்றை வடிகட்டிக் கொடுக்க வேண்டும். இந்த இரண்டைத் தவிர வேறு ஒன்றும் கண்டிப்பாகக் கொடுக்கக் கூடாது. இது ஏறக்குறைய மூன்று வாரம் வரை இருக்கும். ஜுரம் குறைந்தது போல் தோன்றினுலும் உள்ளே மறைந் திருக்கும். அவசரப்பட்டு ஆகாரம் கொடுக்கக் கூடாது. ஆண்டவரைக் கொலு அமர்த்தி இரண்டு வேளை நீராடி வலம் வருதல் முக்கியம். எந்த ஆகாரம் கொடுத்தாலும் அதில் சிறிது திருநீறு இட்டுக் கொடுக்க வேண்டும்.

## மலேரியா ஜுரம்

அதிகக் குளிரும் பின் ஜுரமும் வரும். தினமும் முதல் நாள் வந்த நேரத்திலேயே வந்தால், அது மலேரியா என அறியலாம். ஒரு வாரம் இருந்து, பின் இரண்டு மூன்று நாள் கழித்து மீண்டும் தொடர்ந்து வருவதுண்டு. மூன்றும் முறையும் வரும். ஜுரம் நின்றவுடன் உடல் வேர்க்கும். பிறகு பல மணிநேரம் உடல் சோர்வும் நினைவு இன்மையும் இருக்கும்.

இதற்கும் ஆண்டவரைக் கொலு அமர்த்தி, இரண்டு வேளை நீராடி வலம் வருதல் முக்கியம். நோயாளியால் கொலுவை வலம் வர இயலாவிடின், பிற அடியவர் அவருக்காக வலம் வந்து திருநீறு பூசலாம்.

புழுங்கலரிசிநொய் கஞ்சி, சாத்துக்குடிச் சாறு, காபி, ஹார்லிக்ஸ் முதலியன கொடுக்கலாம். ஒரு மாதம் வரை எண்ணெய் ஸ்நானம் கூடாது. அப்படிக் குளித்தால் ஜுரம் திரும்பிவிடும்.

டைபாய்டோ, மலேரியாவோ எந்தக் காய்ச்சலாக இருந்தாலும் எந்த மருந்தும் கொடுக்கக் கூடாது. யார் வந்து எதைச் சொன்னாலும் செய்யக் கூடாது. நீராடுவதாகவோ, மருந்து உண்ணாமல் இருப்பதாகவோ, யாரிடமும் கூறக் கூடாது. ஆண்டவரே மருத்துவருக்கெல்லாம் மருத்துவர் என்று எண்ணிக்கொண்டு, மருத்துவரிடம் காண்பிப்பதாகவே கூற வேண்டும்.

## காமாலை

அடிக்கடி மலம் போகும்; அது வெண்மையாகவும் பொர பொர என்றும் போகும். உடம்பில் அசதி தோன்றும். ஆகாரம் ஏற்காது. இவையே காமாலைக்கு அறிகுறி. பிறகு கண்ணின் கோடியில் மஞ்சள் தோன்றும். அதைக் கவனிக்காமல் விட்டால் எதைப் பார்த்தாலும் மஞ்சளாகத் தோன்றும். இது கடுமையான நிலை.

இதற்கும் ஆண்டவரைக் கொலு அமர்த்தி, இரண்டு வேளை நீராடி, 21 முறை வலம் வந்து, திருநீறு தீர்த்தம் பருக வேண்டும்.

இந்நோய்க்கு ஆகாரக் கட்டுப்பாடு மிகவும் முக்கியம். ஆடையில்லாத மோர் (வெண்ணெய் எடுத்தது) உப்பில்லாத புழுங்கலரிசிக் கஞ்சி, உப்பில்லாமல் வேக வைத்த கேரட்டுக் கிழங்கு சாப்பிடலாம். கமலா, ஆரஞ்சு, இளநீர், கரும்புச்சாறு இவை உண்ணலாம். இளநீர் அதிகமாகச் சாப்பிடலாம். சாத்துக்குடி கூடாது.

பால், வெண்ணெய், நெய், எண்ணெய், பழங்கள், காபி டீ, ஹார்லிக்ஸ், கொழுப்புச் சத்துள்ள ஆகாரங்கள் இவை கூடாது.

மஞ்சள் கரிசிலாங்கண்ணித் தழையை அரைத்து உப்பில்லாத மோரில் கரைத்துக் குடிக்கலாம். கீழாநெல்லித் தழையையும் அரைத்து உப்பில்லாத மோரில் கரைத்துக் குடிக்கலாம். நீராடி ஆண்டவரை வலம் வந்து திருநீறு தீர்த்தம் அருந்திய பிறகே இவற்றைக் குடிக்க வேண்டும். கஞ்சி முதலியன பின்னர் குடிக்கலாம். இளநீரைப் பாத்திரத்தில் ஊற்றிக் குடிக்காமல் அப்படியே குடிக்க வேண்டும்.

யாரிடமும் நீராடுவதையோ, மருந்து அருந்தாமல் இருப்பதையோ கூறக் கூடாது. அவர்கள் கூறும் யோசனைகளைக் கேட்டுக் கொண்டும் நடக்கக் கூடாது.

# வயிற்று நோய்கள்

## மலச்சிக்கல், விக்கல், வாய்வுத் தொல்லை, ஏப்பம்

மலச்சிக்கல் உள்ளவர்கள் தினமும் நீராகாரத்தில் இரண்டு பங்கு உப்பு போட்டுக் கரைத்து இரண்டு மூன்று டம்ளர் குடிக்கவும். இப்படி வாரம் ஒரு முறையோ இரண்டு முறையோ குடித்தால் இந்நோய் நீங்கும்.

அருட்சட்ட அடியார்கள் தினமும் நீராகாரம் சாப்பிட லாம். இதற்கு அளவாக உப்பு சேர்த்துக் கொள்ள வேண்டும். நீண்டநாள் உபவாசக்காரர்கள் நீராகாரம் சாப்பிடக் கூடாது. மற்ற அடியார்கள் உபவாச நாளில் சாப்பிடக் கூடாது.

வாய்வுத் தொல்லை உள்ளவர்களும் நீராகாரம் சாப்பிட்டால் அந்நோய் நீங்கும். மூல உபத்திரவம் உள்ளவர்களும்நீராகாரம் அருந்தினால் குணமாகும். மூலநோய் உள்ளவர்கள் எல்லா வகைக் கீரைகளையும் உண்ணுவது நல்லது. தினமும் ஒரு கீரை கட்டாயம், சமைத்து உண்ண வேண்டும். தக்காளி, சிறிய வெங்காயம், கருணைக்கிழங்கு, சேனைக் கிழங்கு முதலியன சேர்த்துக் கொள்வது நல்லது.

### விக்கல்

இந்நோய் வந்தால் நீராகாரத்தில் மிதமாக உப்பு சேர்த்து, சிறிது திருநீறு இட்டு ஓரிருமுறை அருந்தினாலே விக்கல் நின்றுவிடும்.

### ஏப்பம்

இந்நோய் உள்ளவர்களும் தொடர்ந்து நீராகாரம் சாப்பிட்டால் சரியாகிவிடும்.

### நீராகாரம் தயாரிக்கும் முறை

காலையில் வடிக்கும் சாதத்தில் கொஞ்சம் எடுத்து வடித்த கஞ்சியைக் கொஞ்சம் ஊற்றி தண்ணீரும் கொஞ்சம் ஊற்றி ஒரு பாத்திரத்தில் மூடி வைக்கவும். குக்கரில் சமைத்த சாதமாயின் அதிலேயே கஞ்சி இருப்பதால் கஞ்சி ஊற்றத் தேவையில்லை. தண்ணீர் ஊற்ற வேண்டும். கொஞ்சம் புளிப்பது நல்லது. நீராகாரம் மறுநாள் காலை பருக வேண்டும். பருகும்போது அதிலுள்ள சாதத்தையும் ஒருபிடி சேர்த்துச் சாப்பிடுவது நல்லது.

## வயிற்றுவலி, வயிற்றுப்போக்கு வயிற்றுப் புண்

### வயிற்றுவலி, வயிற்றுப் போக்கு

இந்நோய் வந்தால், நீராடி முடிந்ததும் வயிற்றில் இறங்குமுகமாக விபூதி பூச வேண்டும். வயிற்றுப் போக்கிற்குப் புழுங்கலரிசிக் கஞ்சியில் மோர் விட்டுப் பருக வேண்டும்.

குற்ற மிருந்தாலும் .வயிற்றுவலி, வயிற்றுப் போக்கு ஏற்படும். ஆண்டவரிடம் முறையிட்டால் குற்றம் தெளிவாகும். விநாயகரை வலம் வந்து மன்னிப்புக் கேட்டால் உடனே நீங்கிவிடும். குழந்தைகளுக்கு வயிற்றில் பூச்சி (நாக்குப்பூச்சி) இருந்தால் நீராகாரத்துடன் விபூதி கலந்து தொடர்ந்து கொடுத்தால் பூச்சி தானே வெளியாகிவிடும்.

## வயிற்றில் புண்

இது இருப்பதாகத் தெரிந்தால், தினம் தவருது மணத்தக்காளிக் கீரையைச் சமையலில் சேர்த்துச் சாப்பிடவும். தினம் காலையில் நீராகாரம் ஒருதுளி விபூதி போட்டு மிதமான உப்பு சேர்த்து அருந்தவும், காரம் சில நாட்களுக்குச் சேர்க்காமல் இருப்பது நலம். நோய் முற்றிலும் நீங்கும் வரை மேற் கூறியவைகளேக் கடைப் பிடிக்கவும்.

வாயில் புண் உள்ளவர்களும் மேலே கூறியவைகளேக் கடைப்பிடித்தால் விரைவில் பயன்தரும். மணத்தக்காளிக் கீரை கிடைக்காத போது வேறுவகைக் கீரைகளேச் சேர்த்துக் கொள்ளவும், தக்காளிப்பழமும் சேர்க்கலாம். தீராத வயிற்று நோய் உள்ளவர்களுக்கும் மேலே கூறியவைகள் பொருந்தும். வயிற்றில் விபூதியைப் பூசி வந்து, கோவிலுக்குச் சென்று விநாயகரை தினம் 11 முறை வலம் வந்தால் நோய் நீங்கும்.

## சீதபேதி

இந்நோய்க்கு காரம், புளி அறவே கூடாது. பழம், கீரை கூடாது. காப்பி, டீ, பால் கூடாது. நன்ருக வெந்த சாதத்தில் எருமைத்தயிர் விட்டு சாப்பிடலாம். உப்பு போட்ட நார்த்தங்காய், எலுமிச்சங்காய் சேர்த்துக் கொள்ளலாம். ஜீரா சாப்பிடுவது நல்லது. இரண்டு வேளேயும் நீராடவேண்டும். விநாயகரை வலம் வர வேண்டும். தேவையானுல் கொலு அமர்த்தலாம்.

## ஆஸ்துமா, காசம், நீர்நோய், குட்டம், ஆனைக்கால்

### ஆஸ்த்துமா, காசம்

இந்நோய்கள் உள்ளவர் தைரியமாகப் பச்சை நீரில் காலந்தவருமல் இரண்டு வேளை நீராட வேண்டும். தண்ணீரே அருந்த வேண்டும். தண்ணீரில் சிறிது திருநீறு இட்டு நீராடுவது நல்லது. திருநீறு இட்ட தண்ணீரில் வாய் கொப்பளித்தல் கால் கழுவுதல் கூடாது. பின்னர் விநாயகரை மூன்று அல்லது பதினொரு முறை வலம்வர வேண்டும். திருநீறும், துளசியும் சேர்த்த தீர்த்தம் பருக வேண்டும். மருந்து எதையும் சாப்பிடக்கூடாது. புகையிலை போடுதல், பீடி, சிகரெட் பிடித்தல், போதைப் பொருள்களை உண்ணுதல் கூடாது. நீராடி முடிந்த பின்னரே காபி முதலியன அருந்த வேண்டும்.

### நீர் ரோகம்

உள்ளவர்கள் அரிசிச் சாதமே சாப்பிடலாம். தேவையானல் கோதுமைப் பண்டம் சாப்பிடலாம். காபி, டீ, குடிக்கக் கூடாது, சர்க்கரைப் பொருள் அதிகம் சாப்பிடலாகாது. பாகற்காய் சாப்பிட வேண்டும். தனக்கு நீர் ரோகம் இருப்பதாக எண்ணி, மருத்துவரிடம் சோதனை செய்ய வேண்டாம். அந்த எண்ணமே தேவையில்லை. காலை, மாலை காலந்தவரு நீராட்டம், விநாயகர் வலம், ஆண்டவர் திருநாம மனனம் முக்கியமாகச் செய்ய வேண்டும்.

**இரண்யா :** இந்நோய் வந்தால் ஆண்டவரை கொலு அமர்த்தி நோய் குணமாகும் வரை 11 முறை வலம் வந்து பிரார்த்திக்க வேண்டும். கௌபீனம் எப்போதும் அணிய வேண்டும். பூசணிக்காய் சாப்பிடக் கூடாது. பாகற்காய் நல்லது. தவரு து விபூதி பூச வேண்டும்.

### பெருவியாதி, குட்டம், வெண்குட்டம்

இவைகளெல்லாம் அருட்சட்ட நெறியைத் தவருமல் கடைப்பிடிப்பதால், ஆரம்ப நிலையானல் படிப்படியாகக்

குறைந்து விரைவில் முற்றிலும் நீங்கிவிடும். முற்றின நோயாக இருந்தால், உறுதியாக, வைராக்கியமாக திருநீறும், தேங்காய்ச் சாந்தும் தவருமல் பூசி, நம்பிக்கையுடன் இருந்தால், கொஞ்ச நாளில் படிப்படியாகக் குறைந்து, முற்றிலும் நீங்கும். இருவேளை காலந்தவரு நீராட்டம், 21 முறை விநாயகரை வலம் வருதல், தவருமல் செய்ய வேண்டும். மருந்தோ, வெந்நீரோ, முற்றிலும் கூடாது. நோய் நீங்கும் செய்தியை யாரிடமும் கூறுதல் கூடாது. நோய் நீங்கின செய்தி பற்றிப் பிறர் கேட்டாலும் குருநாதரே மருத்துவர் என்னும் எண்ணத்தால், மருத்துவரிடம் காண்பிப்பதாகக் கூறவேண்டுமே தவிர வேறு ஒன்றும் கூறக்கூடாது.

### யானைக்கால் ஜுரம்

இது அருட்சட்டத்தினுல் நீங்கும். விபூதியை இறங்குமுகமாகப் பூசவேண்டும். தேங்காய்ச் சாந்தும் குழைத்துப் பூசவேண்டும். காலந்தவரு நீராட்டம், விநாயகர் வலம், வைராக்கியம் இவை அவசியம் தேவை.

### அம்மை

அம்மை நோய்க்குக் காலே, மாலே நீராட்டம் காலந் தவருமல் செய்ய வேண்டும். விபூதி இறங்கு முகமாகப் பூச வேண்டும். மோர், இளநீர் கொடுக்கலாம். அருட்சட்ட வழிபாடுகள் வழக்கம்போல் செய்ய வேண்டும்.

## விஷக்கடி

### நாய்க்கடி

நாய் கடித்தால் உடனே நீராடி கடித்த இடத்தில் திருநீறு வைத்துக் கட்டவும். கொலு அமர்த்தி இரண்டு வேளை நீராடி 21 முறை விநாயகரை வலம் வந்து திருநீறு தீர்த்தம் பருக வேண்டும். இவ்வாறு மூன்று வாரம் செய்தால் முற்றிலும் விஷம் நீங்கிவிடும். கடித்த இடத்தில் தேங்காய் வைத்துக் கட்டுதல் கூடாது. ஆகாரத்தில் தாளிப்பது கூடாது. எதற்கும் எண்ணெய் கூடாது.

எண்ணெய் தேய்த்துக் கொள்வதும் கூடாது. எண்ணெய்ப் பலகாரமும் கூடாது. இவ்வாறு மூன்று வாரம் கண்டிப்பாக இருக்கவேண்டும்.

எலி, பெருச்சாளி கடித்தாலும் மேலே கூறிய முறைப்படி நடந்தால் முற்றிலும் குணமாகும்.

**பாம்பு கடி**

பாம்பு கடித்தால், உடனே தலைமுழுக வேண்டும். கடித்த பாம்பை அடித்துக் கொல்லக் கூடாது. கடித்த இடத்தில் விபூதி வைத்துக் கட்டவும். உள்ளுக்கு விபூதி தீர்த்தம் கொடுக்கவும். பல் கிட்டிப் போய், திறக்க முடியாமல் இருந்தால், கரண்டிக் காம்பை விட்டு நீக்கி விபூதி தீர்த்தம் கொடுக்கவும். விபூதியைத் தலை முதல் கால் வரை இறங்கு முகமாக மூன்று முறை பூசவும். எழுந்த பிறகு விநாயகரை வலம் வந்து வணங்கி வழிபடவும். மருந்து ஏதும் கூடாது. தேங்காய்ச் சாந்து வைக்கவேண்டாம்.

**தேள், பூரான், வண்டு**

தேள், பூரான், வண்டு முதலிய எது கடித்தாலும், உடனே தலை முழுகி வந்து திருநீறு பூசவும். கடித்த பிராணியைக் கொல்லக் கூடாது. முன்னால் எப்போதோ கடித்து, அதனால் நமைச்சல் உள்ளவர்களும் காலை, மாலை நீராடி, திருநீறு பூசினால் குணமாகும். கடிக்குப் பத்து போடுவது, மருந்து போடுவது, மாலை போட்டுக் கொள்வது எதுவும் கூடாது.

கொசு, எறும்பு, கரையான், ஈ, மூட்டைப் பூச்சி, தேள், பூரான், கரப்பான் பூச்சி, வண்டு, பாம்பு போன்ற எந்த உயிரையும் கொல்லுதல் கூடாது. வேறு யாரையாவது விட்டு அப்புறப் படுத்த வேண்டும். அவைகளைக் கொல்வதற்கு நாம் உடந்தையாக இருக்கக் கூடாது.

## தேங்காய்ச் சாந்து

தயாரிக்கும் முறை: முற்றின தேங்காயை உடைத்து, பூப் போல் துருவி, வாணலியில் போட்டு, மிதமான தீ வைத்து வறுக்க வேண்டும். வறுக்கும்போது சிவந்த நிறம் மாறி

கொஞ்சம் கருப்பு நிறம் வரும்வரை வறுத்தெடுக்கவும். அம்மியை நன்ருகக் கழுவித் துடைத்து உலர்ந்த பின், வறுத்த தேங்காயை சூட்டுடன் வைத்து அரைக்க வேண்டும். நீர் தெளிக்காமல் நன்கு அரைத்தால் அதிலேயே எண்ணெய் வரும். நன்கு (நைசாக) அரைத்து ஈரமில்லாத பாத்திரத்தில் அல்லது ஒரு டப்பாவில் போட்டு நன்கு மூடி வைக்கவும். தேவையானபோது தேவையான அளவு கரண்டியால் எடுத்துக் கொண்டு தண்ணீர் விட்டுக் கலந்து வைத்து விட்டுக், கொஞ்ச நேரம் பொறுத்துத் தலையில் தேய்த்துக் கொண்டு ஒரு மணிநேரம் அல்லது அரைமணி நேரம் ஊற வைத்துச் சிகைக்காய் சோப்பு முதலியன போடாமல் அப்படியே தேய்த்துக் குளிக்கவும். தண்ணீர் சிறிது சிறிது தெளித்து மேலும் மேலும் தேய்த்துக் குளிக்க வேண்டும்.

தேங்காய் முற்றினதாக இல்லாவிட்டாலும், வறுப்பது போதாவிட்டாலும் சாந்து கெட்டுவிடும். சரியான பக்குவத்துடன் இருந்தால் மூன்று மாதம் வரை கெடாது.

கீழ்க்கண்ட கல்ப சாமான்களை வாங்கி வந்து அரைத்த தூளில் ஒரு தேங்காய்க்கு இரண்டு டீஸ்பூன் வீதம் கலந்து தேய்த்துக் குளித்தால், கழுத்துக்கு மேல் வரும் பிணி அனைத்தும் நீங்கும். தேங்காய் தேய்த்துக் கொள்பவர்கள் எண்ணெய் தேய்த்துக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. ஆண் பெண் இருபாலாரும் தேய்த்துக் குளிக்கலாம். சிகைக்காய் தேய்த்துக் குளித்தால் பயன் இராது.

## கல்ப சாமான்கள்

| | பொருள் | அளவு |
|---|---|---|
| 1. | ரோஜா மொக்கு | 50 கிராம் |
| 2. | சண்பக மொக்கு | 50 ” |
| 3. | கிளியோதரம்பட்டை | 50 ” |
| 4. | பூஞ்சாந்துப் பட்டை | 50 ” |
| 5. | வெட்டி வேர் | 50 ” |
| 6. | கசகசா | 50 ” |

7. கார்போகத்தரிசி 50 ,,
8. மாசிப் பச்சை 50 ,,
9. பூலாங் கிழங்கு 100 ,,

வெட்டி வேரைத் துண்டாக நறுக்கி மூன்று நாளைக்கு நன்ருகக் காய வைத்து நன்ருக இடித்து வஸ்திரகாயம் செய்து வாசனை போகாமல் மூடிவைத்துக் கொள்ளவும். இந்த சாமான்கள் நாட்டு மருந்துக் கடைகளில் கிடைக்கும். ஏதாவது சாமான் குறைந்தால் கடைக்காரரையே வாங்கிப் போட்டுக் கொடுக்கச் சொல்லவும்.

கல்பத் தூளைத் தனியாகத் தேய்த்துக் குளிக்கக் கூடாது. தேங்காய்ச் சாந்துடன் கலந்துதான் உபயோகப் படுத்தவேண்டும்.

## தேங்காய்ச் சாந்தின் உபயோகம்

கல்பத்தூள் சேர்க்காத தனித் தேங்காய்ச் சாந்தைத் தான் ரணங்களுக்கு வைக்க வேண்டும்.

அவசரத் தேவைக்காக ஒரு தேங்காயை உடைத்து துருவி வறுத்து டப்பாவில் போட்டு மூடி வைத்துக் கொண்டால் ஏதாவது காயம், இரணம் முதலியவற்றிற்கு வைக்க வேண்டி நேரும்போது கொஞ்சம் வறுத்த துருவலை எடுத்து அம்மியில் வைத்து அரைத்துக் கட்டலாம். சட்ட அடியார்கள் இல்லங்களில் இவ்வாறு வைத்துக் கொள்வது நலம்.

காலில் முள்ளோ, கண்ணுடியோ குத்தினதாகத் தெரிந்தால் ஊசியினுல் கிளறிப் பார்த்து, எடுத்து விட்டு, அந்த இடத்தில் தேங்காய்ச் சாந்தை வைத்துக் கட்டவும். மண் புகுந்தால் தொந்தரவு நேரும். காலில் உள்ளது என்ன வென்று தெரியாமலும் எடுக்க முடியாமலும் இருந்து வலி மட்டும் இருந்தால் தேங்காய் வைத்து, தொடர்ந்து கட்டினுல், தானே வெளியில் வந்துவிடும். நமக்குத் தெரியாமல் இருந்தோ, அலட்சியமாகவோ விட்டு விட்டால் சீழ் பிடித்துக் கொள்ளும். இந்நிலையிலும் தேங்காய் வைத்துக் கட்டினுல் ஏதாயிருப்பினும் வெளியாகி விடும்.

உடம்பில் எங்கேயாவது வீக்கம், வலி இருந்தாலும், மார்புச் சளி, இருமல், மூச்சுத் திணறல் இருந்தாலும், தேங்காய் சாந்தைக் கொஞ்சம் எடுத்து, சந்தனம் போல் குழைத்துத் தினம் தவறுமல் பூசி வந்தால், முற்றிலும் நீங்கும். நம்பிக்கையோடு, மாதக் கணக்கில் ஆனுலும் விடாது செய்து வந்தால் நீங்கிவிடும்.

உடம்பில் எங்காவது கட்டி புறப்படுவதாகத் தெரிந்தால் உடனே ஒரு நாளைக்கு இரண்டு மூன்று முறை விபூதி தடவி வந்தால் அப்படியே அமுங்கி விடும். உடைந்து விட்டால் புண்ணில் தேங்காய்ச் சாந்து வைத்து மேலே ஒரு வெற்றிலை வைத்துக் கட்டவும்.

கட்டியோ, இரணமோ பெரியதாக இருந்து, விரைவில் ஆருமல் இருந்தால், காலை மாலை நீராடப் புறப்படுமுன், முன்னர் கட்டிய வெற்றிலை, தேங்காயை எடுத்து விட்டு, ஒரு பாத்திரத்தில் தண்ணீர் வைத்துக் கொண்டு, மெல்லிய துணியையோ அல்லது பஞ்சையோ கொண்டு தண்ணீரில் நனைத்து நனைத்துப் பிழிந்து, புண்ணில் உள்ள சீழைச் சுத்தமாக, வலிக்காமல் எடுக்கவும். புண் ஓரங்களில் வெளுப்பு தெரியும்வரை எடுத்துவிடவும். பின்னர் நீராடி வந்ததும், நன்கு துடைத்துவிட்டு மறுபடியும் தேங்காய் வைத்து இலைபோட்டுக் கட்டவும். தினம் சீழைச் சுத்தமாக எடுத்து விட்டால், ஒரே வாரத்தில் காய்ந்து விடும். அழுத்திஞல் வலி இல்லாமல் இருக்கும் வரை தேங்காய் வைக்க வேண்டும். பின்னர் சில நாட்களுக்கு விபூதி பூச வேண்டும்.

வீக்கம், சுளுக்கு, அடிபட்ட காயம், இவற்றிற்கும் தேங்காய் வைத்துக் கட்டலாம். ஆழமான காயம், எலும்பு முறிவு இருக்குமோ என்ற ஐயம் இருந்தால் ஆண்டவரைக் கொலு அமர்த்தி, காலந்தவருது நீராடி வலம் வந்து வழிபட்டால் குணமாகும். இதற்கும் தேங்காய்ச்சாந்து வைத்துக் கட்டவேண்டும். குணமாகும் வரை நம்பிக்கையோடு, விடாமல் செய்யவும். பாதத்தின் கீழ் திருநீறு பூசுதல் கூடாது. தேங்காய் மட்டும் வைத்துக் கட்டலாம். மற்ற இடங்களில் திருநீறும் தேங்காய்ச் சாந்தும் குருநாதரை வேண்டிக் கொண்டு வைத்துக் கட்ட வேண்டும்.

புண்ணை யாரும் பார்க்க அனுமதிக்க வேண்டாம். யார் வந்து என்ன வைத்தியம் சொன்னாலும் கேட்க வேண்டாம். நம்பிக்கையில்லாதவர்களின் திருஷ்டி ஏற்பட்டால் பிறகு தொல்லை ஏற்படும்.

## பயிர்கள்

### பயிர்த்தொழிலில் பயிர்களுக்கு வரும் நோய்களைத் தடுக்க:

முதலில் விதைகளை நாற்றுவிட எடுக்கும் போதே அன்புடன் ஆண்டவரைப் பிரார்த்தனை செய்து திருநீறு கலந்து நாற்றுவிட வேண்டும். நாற்றங்காலில் உள்ள பயிர்களைத் தினமும் பார்க்கச் செல்லும்போது வயலின் நான்கு மூலைகளிலும் கொஞ்சம் திருநீறு இடவேண்டும். நட்ட பின்னர் பயிர் வளர்ந்து அறுவடை ஆகும் வரையில் தினமும் திருநீறு வயல்களின் மூலைகளில் தெளிப்பது நல்லது.

கதிர்விட்டு மணிகள் முற்றும் வரையில், விநாயகருக்கு அபிடேகித்த தீர்த்தத்துடன் கொஞ்சம் தண்ணீர் கலந்து திருநீறு இட்டு மாவிலை அல்லது வேப்பிலையால் வயல் முழுவதும் தெளிக்க வேண்டும். இந்த முறை எல்லாப் பயிர்களுக்கும் செடிகொடிகளுக்கும் பொருந்தும், யாராவது கேட்டால் செய்வதைக் கூற வேண்டாம். அவர்களால் அருட்சக்தியின் ஆற்றலை அறிந்து கொள்ள முடியாது. நம்பிக்கையோடு செய்து கொண்டு வந்தால் போதும், மருந்து போட வேண்டியதில்லை. பூச்சி வராது. இறங்கியதாகத் தெரிந்தாலும் நம்பிக்கையுடனும் வைராக்கியத்துடனும் விபூதி தீர்த்தம் தெளித்தால் நலம் உண்டாகும்.

பூச்சிகளைக் கொல்வதற்கு மற்றவர்கள் கூறும் எந்த முறையையும் நாம் பின்பற்றக் கூடாது. அருட் சட்ட அடியவர்கள் மேலே கூறிய அருட்சட்ட முறைகளைப் பின்பற்றி, கைமேல் பலன் கண்டிருக்கின்றார்கள்.

## ஆடு, மாடுகள்

ஆடு, மாடு முதலிய விலங்குகளுக்கு, 'கோமாரி' போன்ற எந்த நோய் வந்தாலும் குளிப்பாட்டி, திருநீறு தீர்த்தம் உள்ளுக்குக் கொடுக்க வேண்டும். நெற்றியிலும் உடல் முழுவதும் திருநீறு பூச வேண்டும். காயம் பட்டாலும் திருநீறு பூசலாம். காயம் அதிகமாக இருந்தால் தேங்காய்ச் சாந்து தடவலாம்.

கறவை மாடுகள் திருஷ்டியினுல் பால் கறக்கவில்லை என்ருல், காம்பில் திருநீறு பூசி, உள்ளுக்கும் திருநீறு தீர்த்தம் கொடுக்க வேண்டும், தீனியிலும் கலந்து கொடுக்கலாம். யாரிடமும் எதையும் கூறக்கூடாது.

## பேய் பிடித்தவர்களுக்கு

பேய் பிடித்தவர்களை நீராடச் செய்து, ஈரத் துணியோடு ஆண்டவர் சந்நிதியில் உட்கார வைத்துத் திருநீறு போட்டுக் கொண்டே இருக்க வேண்டும். ஆண்டவர் திருநாமம் கூறி கற்பூர ஆராதனை செய்து அதைக் காட்டியதும் பேய் போய்விடும். பயப்படக் கூடாது.

பல நாள்பட்டதாக இருந்தால், ஆடி ஓய்ந்ததும், கற்பூரம் காட்டி, 'விட்டுப் போய்விடு' என்று கூற வேண்டும். கள் சாராயம் ஏதேனும் கேட்டால் இங்குக் கிடைக்காது என்று கூறவேண்டும். மற்றவை கேட்டால் கொடுக்கலாம். சத்திய வாக்கு வாங்கிக் கொண்டால் பின்னர் வராது.

## பைத்தியம் பிடித்தவர்கள்

பைத்தியம் பிடித்து அதிக நாள் ஆகாமல் இருந்தால், ஆண்டவர் அருட்சட்டம் ஏற்றுக் கொண்டதும் போய் விடும். காலந்தவரு நீராட்டம் வழிபாடு வலம் வருதல் இவை நம்பிக்கையோடு செய்தால் பைத்தியம் தெளிந்து விடும்.

## கிரக தோஷம்

வீட்டில் கிரக தோஷம் இருப்பதாக, ஐயம் இருந்தால், தெரு வாயிற்படி, பின்புற வாயிற்படி வெளிப்புற

ஜன்னல்கள் முதலியவற்றின் மேலே ஆணி அடித்து ஆண்டவர் திருநீற்றுப் பொட்டலத்தை ஒரு துணியில் முடிந்து, கட்டித் தொங்கவிட வேண்டும். ஆண்டவர் படத்தை வைத்துப் பூஜை செய்தால் எந்த கிரக தோஷமும் வராது.

யாரிடமும் எதையும் கூறக் கூடாது.

## கொலு அமர்த்துதல்

குருநாதர் அருள் உலா செய்து கொண்டிருக்கையில் அருட்சட்ட அடியார்களின் இல்லங்களில் கடுமையான நோய்களோ, சிக்கலான சூழ்நிலைகளோ ஏற்படும் போது குருநாதரை உறுத்து நினைப்பார்கள். அவ்வமயம் குருநாதர் 'கதுமெனக் காட்சி அளித்து' அடியார்களின் துன்பங்களைப் போக்கி அருள்புரிவார்.

தற்போது அடியார்கள் தங்களுக்கு ஏதேனும் நோயோ, மற்ற தொல்லையோ ஏற்படும் சமயங்களில், ஆண்டவர் தங்கள் இல்லத்தில் எழுந்தருளி இருப்பதாக எண்ணிக்கொள்ள வேண்டும். அப்படி எண்ணுவதைச் செயல் வடிவில் ஆக்குவதுதான் கொலு அமர்த்துதல். அவ்வாறு கொலு அமர்த்தும் முறையைப் பற்றிக் காண்போம்.

கொலு வைக்க உத்தேசிக்கும் இடம் தனியானதாக இருக்கவேண்டும். பல நாட்கள் கொலுவானாலும், மாதக் கணக்கில் அமர்த்தும் கொலுவானாலும் வைத்த இடத்திலிருந்து கொலுவை நகர்த்தவோ, மாற்றவோ கூடாது.

கொலு அமர்த்தத் தீர்மானித்த இடத்தை முதலில் பெருக்கி, மெழுகித் தூய்மை செய்து கோலமிட வேண்டும். நாற்காலி ஒன்றைக் கழுவி வைக்கவும். அதன்மீது புதிய வெள்ளைத் துணியைப் பரப்பவும். வீட்டில் புதிய துணி இல்லையென்றால், காடா, மல் போன்ற துணி இரண்டு மீட்டர் வாங்கிப் பரப்ப வேண்டும். ஆண்டவர் திருவுருவப் படத்தை நாற்காலியில் வைத்து அசையாமல்,

கீழே நழுவாமல் இருக்கும்படி நன்கு கட்டி அமர்த்தவும். ஆண்டவர் திருவுருவப் படத்துடன் நம் வீட்டில் பூசையில் விநாயகர் கற்சிலையோ, உலோக விக்ரகமோ இருந்தால் நாற்காலியில் எழுந்தருளச் செய்ய வேண்டும். கற்சிலை யாயின் தினமும் எடுத்து அபிடேகம் செய்து நன்கு துடைத்து மலர் சாத்தி மீண்டும் அங்கே அமர்த்த வேண்டும். உலோக விக்ரகமாக இருந்தால் வெள்ளிக் கிழமை மட்டும் எடுத்து அபிடேகம் செய்யலாம். விருப்பம் போல் செய்யவும். அபிஷேகம் செய்தபின் நன்ருகத் துடைத்து வேறு 'வஸ்திரம் உடுத்தி, சந்தனப் பொட்டிட்டு மீண்டும் அமர்த்தி மலர் சூட்டி வழிபட வேண்டும். நாற்காலியின் எதிரில் ஒரு மணைப் பலகையைக் கழுவி ஆண்டவர் திருவடிகளைக் கோலத்தால் தீட்டி வைக்கவும். இருபுறமும் குத்து விளக்குகளை ஏற்றி வைக்க வேண்டும். ஆண்டவருக்கு மலர் மாலை சாத்தவேண்டும். ஒரு தட்டில் தேங்காய், பழம், வெற்றிலைப் பாக்கு இவை வைத்துத் தேங்காயை உடைத்து வைத்துக் கற்பூரம் காட்டி ஆராதனை செய்யவும். நோயுள்ளவர்கள் பதினேரு முறை வலம் வந்து வணங்கி, வேண்டிக் கொள்ள வேண்டும். பின்னர் திருநீறு, தீர்த்தம் பருக வேண்டும். பூசை செய்யும்போது மட்டும் இரண்டு விளக்குகள் இருக்கலாம். மற்ற நேரங்களில் ஒரு விளக்கு மட்டும் அணையாமல் இருக்க வேண்டும். ஞாயிறு, செவ்வாய், வெள்ளி ஆகிய மூன்று நாட்களிலும் கொலு அமர்த்தவோ பூர்த்தி செய்யவோ கூடாது. மாதப் பிறப்பன்று வைக்கலாம். ஆனல் எடுக்கக் கூடாது.

பிரஸவ காலங்களில் மட்டும் எந்தக் கிழமை ஆனலும் எந்த நேரமானலும் வலி தோன்றியவுடன் கொலு அமர்த்த வேண்டும். பிரஸவ காலம் இரவாக இருந்தால், முதலில் ஆண்டவரை மட்டும் கொலு அமர்த்தி, மறுநாள் காலையில் விநாயகருக்கு அபிடேகம் செய்து கொலுவில் எழுந்தருளச் செய்யலாம். கொலு வைக்கும் போது நிதானமாக நன்கு யோசித்து முறைப்படி கவனித்து அமர்த்த வேண்டும். அவசரம் கூடாது. ஏதாவது தவறு நேர்ந்துவிடும். கொலுவில் ஆண்டவரைக் கிழக்கு நோக்கி அமர்த்த வேண்டும்.

கொலு வைத்த நாள் முதல் பதினொரு நாளைக்குள் நோய் குணம் ஆகிவிட்டாலும், பதினொரு நாள் வரையில் கொலுவை வைத்திருக்க வேண்டும். மறுநாள் மேலே கூறிய கிழமைகள் வந்தால் அதற்கும் மறுதினம்தான் எடுக்க வேண்டும். நோயுற்றவர்கள் முற்றிலும் குணம் அடைய எத்தனை நாட்கள் ஆனாலும், அது வரை கொலுவைப் பூர்த்தி செய்யக் கூடாது. நோய் முற்றிலும் குணமானதாகத் தெரிந்தாலும், மேலும் பத்து நாள் வரை பொறுத்துப் பார்த்து இனிக்கவலை இல்லை என்று அறிந்து தான், கொலுவைப் பூர்த்தி செய்ய வேண்டும். அவசரப் பட்டு, பூர்த்தி செய்து விட்டால், கொஞ்சம் நோய் இருந்தாலும் அது நீங்காது.

வீட்டில் சுட்டத்தில் உள்ளவர்கள் யாருக்காவது அசௌகரியம் இருந்தால், முன்னர் யாருடைய நோய் நீக்கத்துக்காகக் கொலு அமர்த்தினோமோ அவர்களுக்குக் குணமாகி விட்டது என்று கொலுவைப் பூர்த்தி செய்யாமல் தற்போது நோயுற்றவர்களுக்கும் முழுதும் குணமான பின்னர்தான் கொலுவைப் பூர்த்தி செய்யவேண்டும். அதாவது கொலு அமர்த்தியுள்ள வீட்டில் எல்லோரும் நலமாக இருந்தால்தான் கொலுவைப் பூர்த்தி செய்ய வேண்டும்.

கொலு அமர்த்தியுள்ள நாட்களில் தினமும் அன்ன நைவேத்தியம் செய்ய வேண்டும். கொலு அமர்த்தாத நாட்களிலும் ஆண்டவருக்குத் தினமும் அன்ன நைவேத்தியம் செய்தல் அவசியம். தினமும் நம்மால் இயன்றவரை காலை, மாலை எந்த நேரத்திலும் பலகாரங்களோ, சித்ரான்னங்களோ சுண்டலோ செய்து படைத்து அடியார்களுக்கு தம் பிரசாதம் தந்து நாமும் உண்ண வேண்டும். கொலுவை அமர்த்தும் நாளிலும், பூர்த்தி செய்யும் நாளிலும் அன்னம், சர்க்கரைப் பொங்கல், வடை தேங்காய், பழம் இவை வைத்து நைவேத்தியம் செய்து, எல்லோரும் வலம்வந்து வணங்க வேண்டும். கொலுவைப் பூர்த்தி செய்கையில் விளக்கில் திரி மாற்ற வேண்டும். பின்னர் சுவாமிகள் திருவுருவப் படத்தையும் விநாயகரையும் நித்திய பூசையில் வைத் திருந்த இடத்தில் எழுந்தருளச் செய்ய வேண்டும்.

நோயின் தன்மையைப் பொறுத்து 11, 21, 54, 108 என்னும் முறைப்படி வலம் வரலாம். கொலு அமர்த்தும் நாளில் எத்தனை முறை வலம் வந்து தொடங்குகின்றோமோ, அதை இறுதி வரையில் கடைப்பிடிக்க வேண்டும். நோயுள்ளவர்கள் வலம்வர இயலாமல் இருந்தால் அவர்களுக்காக வேறு ஒருவர் நீராடி கொலுவை வலம்வந்து திருநீறுதீர்த்தம் தரவேண்டும். எழுந்து நடமாட முடிந்ததும் நோயாளியே வலம் வரவேண்டும்.

எத்தகைய கடுமையான பிணி ஏற்பட்டிருந்தாலும் நோயுள்ளவர்கள் காலை, மாலை இருவேளைகளிலும் நீராட்டம் தவறக்கூடாது.

கொலு அமர்த்தி இருக்கும்போது வெளியூர் போக நேர்ந்தால், காலையில் வலம்வந்து வழிபட்டுச் சென்று, இரவு தங்காமல் திரும்பிவிடவேண்டும். ஒருக்கால் இரவு தங்க நேர்ந்தால் மறுநாள் மாலைக்குள் வந்து நீராடி வலம் வந்து வழிபடலாம். ஆக ஒரு நாளைக்கு ஒருமுறையாவது வலம் வந்து வழிபடுதல் அவசியம்.

நம்மை அறியாமல் ஏதாவது தவறு நேர்ந்தால் மன்னிப்புக் கோரி, பதினொரு முறை வலம்வரவேண்டும். இவ்வாறு மூன்று வேளையும் கொலுவை வலம்வரவேண்டும். கொலு அமர்த்தியில்லாத காலங்களில் விநாயகரை மேலே கூறிய படி வலம் வந்து மன்னிப்புக் கேட்கவேண்டும்.

கொலு அமர்த்தியுள்ள காலங்களிலும் மற்றநாட்களிலும் காலை நீராடி வழிபாடு முடிந்ததும் விடியும் வரை ஆண்டவர் அருட்பாடல்களைப் பக்தியுடன் பாடிப் பாராயணம் செய்யவும். எப்போதும் ஆண்டவரை மறவாமல் இருப்பதே சிறந்த பக்தியாகும்.

கொலு இருக்கும் பக்கம் காலைநீட்டி படுக்கவோ உட்காரவோ கூடாது. கை, கால் சுத்தம் செய்யாமல் அந்த இடத்திற்குச் செல்லக்கூடாது. அந்த இடத்திற்குச் செல்லும்போது பயபக்தி அதிகம் இருக்க வேண்டும் கொலுவைச் சுற்றுமல் காலையில் எந்த அவசர வேலை இருந்தாலும், மாலை வந்து சுற்றுவோம் என்று போகக்

கூடாது. கண்டிப்பாக வலம் வந்து வணங்கிய பிறகுதான் புறப்பட வேண்டும்.

நோய் நீங்கி நன்மை அடைந்ததும் அவசரப்படாமல், "ஆண்டவர் நமக்கு நன்மை பயக்க வேண்டும் என்று வரவழைத்தோம், செலவில்லாமல், துன்பமில்லாமல நோயைத் தீர்த்து வைத்த ஆண்டவரை இன்னும் "சிலநாள் வைத்திருக்க மாட்டோமா" என்று எண்ணிய வண்ணம் கொலுவைப் பூர்த்திசெய்ய வேண்டும். கொலு அமர்த்தி யிருக்கும் நாடகளில் அருட்சட்டத்தில் உள்ளவர்கள் யாரேனும் நம்வீட்டிற்கு வந்தால் அவர்களுக்கு ஆண்டவர் கொலு அமர்ந்திருப்பதைக் கூறி, அவர்களையும் கை, கால் சுத்தம்செய்து கொண்டு வலம்வரச் செய்ய வேண்டும். ஆண்டவரை நேரில் காண்பதாகவே எண்ண வேண்டும்.

ஆண்டவர் "மச்சு வீட்டிற்கும் போகும்; குச்சு வீட்டுக்கும் போகும்", "ஏழை பங்காளன்" என்று அருளியுள்ளார்கள். நம் வீட்டில் வசதி இல்லையே நாம் எப்படி கொலு வைப்பது என்று எண்ண வேண்டாம். நாம் வசிக்கும்இடம் சிறியதாக இருந்தாலும் அவசியம் கொலு அமர்த்தலாம். நம்மால் முடிந்ததைச் செய்யலாம்.

விநாயகரும் ஆண்டவரும் ஒன்றே. அறுகம்புல் தும்பைப்பூ, வெள்ளெருக்கம் பூ முதலிய பூக்களும், வில்வம் வன்னி முதலிய பத்திரங்களும் புஷ்பச் செடிகளின் பச்சிலைகளும் விநாயகருக்கு ஏற்புடையன. அதுபோல் காசு, பணம் செலவின்றி கிடைக்கும் மலர், பத்திரங்களை உள்ளன்போடு சாத்தி உருகி வழிபட்டால் அதுவே ஆண்டவருக்குப் பரம திருப்தி அளிக்கும்.

நாம் பலவித பலகாரங்களைச் செய்து படைக்க வில்லையே என்று ஏங்காமல், நமக்குக் கிடைப்பதை மன முவந்து உள்ளன்புடன் ஆராதனை செய்யலாம்.

ஆண்டவர் கொலு அமர்ந்து இருக்கும்போது இரைந்து பேசுதல், சண்டைபோடுதல், அழுதல், அமங்கலச் சொற்களைச் சொல்லுதல் அவச்சொற்களைப் பேசுதல்

கூடாது. அமைதியாகவும், அன்பாகவும், பக்தியாகவும் நடந்து கொள்ள வேண்டும்.

சட்டத்தில் இல்லாதவர்களிடம் கொலுவைப்பற்றியோ நோய் நீக்கம் ஆனது பற்றியோ எதையும் வெளியிடக் கூடாது. அவர்கள் ஏதேனும் கேட்டால், ஆண்டவரே மருத்துவர் என்னும் நம்பிக்கையான எண்ணத்தால் "மருத்துவம் தான் பார்க்கிறோம், குணமாகி வருகிறது" என்று கூறி பேச்சை மாற்றி வேறு பேச்சுக் கொடுத்து அனுப்பி விடவும்.

இவ்வாறு ஆண்டவர் கொலுவை பயபக்தியோடு நடத்திப் பயன்பெறுபவர்கள் வீட்டில் என்றும் இலட்சுமி கடாட்சம் இருக்கும்.

சட்டத்தில் இல்லாதவர்களை ஆண்டவர் கொலு இருக்குமிடத்தில் செல்ல அனுமதிக்கக் கூடாது.

கொலு வைத்திருக்கும் போது அதற்குரிய நபர் தெய்வாதீனமாய் அடக்கமாக நேர்ந்து விட்டால், வீட்டில் உள்ள பிறர் தினமும் நீராடி பூசை செய்து கொண்டு வந்து பதினோராவது நாள் சமாதி பூஜை முடிந்த பிறகு ஒருநாளில் கொலுவைப் பூர்த்தி செய்யவேண்டும். நபர் அடக்கமாகிய உடனே அலட்சியமாக கொலுவைக் கலைத்துவிடுவதோ, பூர்த்தி செய்வதோ கூடாது.

## மகப்பேறு காலம்

ஆண்டவர் சட்டத்தில் உள்ளவர்கள் கருத்தரித்தால் ஒன்பதாம் மாதம்முதல் இரண்டுவேளை நீராட்டம் தவறாது செய்யவேண்டும். பிரஸவகாலம் சமீபித்தவுடன் ஒரு தேங்காய் தயாராக வைத்திருக்க வேண்டும். பிரசவவலி எடுத்தவுடன் ஆண்டவரைக் கொலு அமர்த்த வேண்டும்.

### கொலு அமர்த்தும் விதம் :-

58-வது பக்கம் பார்க்க :-

தேங்காய் பழம் நைவேத்தியமாகப்படைக்க வேண்டும். ஆராதனை செய்தகற்பூர ஒளியை இருகைகளாலும் போற்றி

கும்பிடச் செய்து வேண்டிக்கொள்ளச் சொல்லவும். விபூதி தீர்த்தம் தரவும். வலியுற்ற பிறகு அடிக்கடி வயிற்றில் இறங்குமுகமாக திருநீற்றைப் பூசவும். அடிக்கடி விபூதி தீர்த்தம் தரவும். சட்டத்தில் சேர்ந்தவர்களுக்கு சுகப் பிரஸவம் நிச்சயம் நடககும். பயப்பட வேண்டாம்.

ஏதாவது காரணமாகப் பனிக்குடம் உடைந்து பிரஸவசத்திற்கு காலதாமதம் ஆனாலும், ஆண்டவர் சரி செய்து கொண்டிருக்கிறார் என்று முழுநம்பிக்கையுடன் இருக்கவேண்டும், எல்லோரும் வியக்கும்படி, சுகப் பிரஸவமாக நன்மையாக நடக்கும். மகப்பேறு பார்க்க வந்த மருத்துவத்தாதி மருத்துவர் வந்துதான் ஆக, வேண்டும் என்றால், அதற்காகப் பயப்படாமல் ஆண்ட வரை உறுத்து நினைத்து வழிபட்டால் நலமாகும்

பிரஸவமானவுடன் புதிய தண்ணீரில் ஒரு துளி விபூதி இட்டு தாய்க்கு உள்ளுக்குக் கொடுக்க வேண்டும். முப்பது நாளும் கொலு சுற்ற வேண்டும். உடல் நலம் வாய்த்த பின் கொலுவைப் பூர்த்தி செய்ய வேண்டும். பிரசவமானவுடன் தொப்புள் கொடியை நீக்கி விட்டு இடத்தை சுத்தம் செய்தபின், உதவியாளர் நீராடி, சேய்க்கும் தாய்க்கும் நீராட வைத்திருக்கும் புதிய தண்ணீரில் ஒருதுளி விபூதிஇட்டு நீராட்டவேண்டும். உதவியாளர் சேயைக்கையில் எடுத்துக் கொண்டு கொலுவை வலம்வர வேண்டும். பிறகு தாயைப் பிடித்துக் கொண்டு கொலுவை மூன்று முறை வலம்வரவேண்டும். தாயால் வலம்வர இயலவில்லை என்றால் உதவியாளர் வலம்வந்து விபூதி தீர்த்தம் தாய்க்கும் சேய்க்கும் கொடுக்கவும். பின்னர் நீராகாரத்தில் ஊறிய ஒரு பிடிசாதத் துடன் நீராகாரம் கொடுக்க வேண்டும்.

பிரஸவம், பகல், இரவு எந்த நேரத்தில் ஆனாலும் உடனே நீராட்டவேண்டும். இரவில் ஒருமணிக்குப் பின்பு பிரஸவம் ஆகி நீராடி இருந்தால் மீண்டும் நான்கு மணி நீராட்டம் தேவையில்லை. அதற்கு முன்னர் ஆகி இருந்தால் நான்கு மணி நீராட்டம் செய்யவேண்டும்.

பிரஸவித்தவர்கள் உடல் நலத்துடன் இருந்தால் காலை நீராட்டம் மட்டும் போதும். ஏதாவது தலைவலி, வயிற்றுவலி, ஜுரம் போன்றவை இருந்தால் இரண்டு வேளை நீராட்டம் செய்ய வேண்டும். பிரஸவித்த தாய்க்கு நீராகாரம் மூன்றுமாதம் வரை கொடுப்பது நல்லது.

இரண்டாம் நாள் பசி இருந்தால் ரொட்டி, காபி தரலாம். மூன்றும் முதல் நாள் ஜீரணத்திற்கு ஏற்ற உணவு கொடுக்கலாம். மருந்துப் பொருள் ஏதும் சேர்க்கக் கூடாது. எந்த ஆகாரமும், ஆறிய பின் கொடுக்க வேண்டும். அவரவர்கள் வசதிப் படி, பழக்க வழக்கப்படி, உணவு கொடுக்கலாம். மோடி, திப்பிலி, சுக்கு முதலிய பொருள்களை எக்காரணங் கொண்டும் கொடுக்கக்கூடாது. பத்து. நாள்வரை மோர் கொடுக்கக் கூடாது. பிறந்த குழந்தைகளுக்குத் தலையில் விளக்கெண்ணெய் பூசுதல், உள்ளுக்கு விளக்கெண்ணெய் கொடுத்தல் கூடாது. சமையலிலும் எப்போதும் விளக்கெண்ணெய் சேர்க்கக்கூடாது.

சட்டத்தில் இல்லாதவர்கள் யாராவது இருந்தால் அவர்களை அனுப்பி விட்டுப் பின்னர் தாய்க்கும் குழந்தைக்கும் நீராட்ட வேண்டும். உதவியாளர் தவிர வேறுயாரும் இல்லாமல் இருப்பது நல்லது. நீராடுவதோ ஆகாரம் கொடுப்பதோ கண்டிப்பாக யார்க்கும் தெரியக் கூடாது. எவரிடமும் நடப்பதைக் சொல்லக்கூடாது. ஏதாவது கேட்டால் பேச்சை மாற்றி விடை கூறி அனுப்பி விடவேண்டும். நம்பிக்கையில்லாதவராயின் திருஷ்டி வந்தால் கஷ்டம்.

மாதவிடாய் ஆனவர்கள் மூன்று நாள் ஆனதும் நிற்காமல் தொடர்ந்து இருந்தால் தவறாமல் நீராகாரம் சாப்பிட வேண்டும்.

## ஜோதிடம், மாந்திரிகம் தவிர்த்தல்

நாளும் கோளும் எல்லாம் வல்ல எந்தையின் அருளுக்கு அடங்கினவேயன்றி, அதை மீறிச் செல்லும் தகையன அல்ல என்பதே சுவாமிகள் கருத்து. எனவே, இறைவ

னுடைய இன்னருளிலேயே நாட்டம் வைக்க வேண்டிய "உலகத்து மக்கள் நாளையும், கோளையுமே பெரிதாக நம்பிக்கொண்டு, அவற்றிற்கு மிக மிக மேலாக இருக்கின்றதும், அவற்றை எல்லாம் படைத்து இயக்குகின்றதுமான தெய்வத்தின் திருவருளை மறந்து விடவோ, இழிவு படுத்தவோ, கூடாது" என்பதும் சுவாமிகளின் கட்டளை.

அருட்சட்ட அடியார்கள் ஆண்டவரை உறுதியாக நம்ப வேண்டுமேயன்றி, நோய் வருங்காலத்தில் மந்திர வாதிகளைக் கொண்டு மந்திரித்தல், தாயத்தை கட்டுதல் முதலியன கூடாது. அவை மருந்து அல்லவே என்று எண்ணிவிடக் கூடாது. சட்டத்தில் சேருமுன் ஏதாவது தாயத்தை கட்டியிருந்தால் அதை அவிழ்த்து எறிந்துவிட வேண்டும்.

நமக்கு மிகவும் வேண்டிய நண்பர்களோ, உறவினர்களோ வந்து 'இது ஒன்றும் வைத்தியமில்லையே' என்று சொல்வதைக் கேட்டு மாந்திரிகம் ஏதாவது செய்து விட்டால், அது குற்றமாகிவிடும். நமக்கு நினைவில்லாத நிலைமையில் கூட எதுவும் செய்யாமல் இருக்கும்படி கண்டிப்பாகக் கூறி வைத்துவிட வேண்டும். அதனால் துன்பம் அனுபவிப்பது நாம்தான்.

## பிரார்த்தனை செய்து கொள்ளாமை

குறைகள் நீங்கவும், நலங்கள் கைகூடவும் விரும்பும் மக்கள் தெய்வத்திற்குப் பிரார்த்தனை செய்து கொள்ளும் பழக்கம் இருந்து வருகிறது.

எல்லா உயிர்களுக்கும் உடம்பைக் கொடுத்து, கருவி கரணங்களைக் கொடுத்து, போகங்கள் துய்க்க உலகைப் படைத்துக் கொடுத்து, ஒவ்வொரு வினாடியும் உடனிருந்து இனிது பேணிக் காக்கும் பரம்பொருளுக்கு, எல்லாம் தெரியும். எவ்வுயிர்க்கு எச்சமயத்தில் எந்த எந்தப் பொருள்களைத் தந்து, சூழ்நிலைகளைத் தந்து எப்படிக் காக்க வேண்டும் என்று, மாபெருங் கருணையால் காத்தருள் புரியும் இறைவனுக்கு நாம் ஏதாவது கொடுக்க வேண்டும் என்று அவர் விரும்புவதில்லை. ஆதலால் நாம் அவர்க்கு

'இது தருகிறேன், அது தருகிறேன் என்று எண்ணுவதோ, கூறுவதோ மிக மிக அறியாமையாகும்.

நம் தேவைகளை அவரிடம் கூறிக் கொள்வதோ, மனப் பூர்வமாக அவர்க்குக் கைங்கரியம் செய்வதோ தவறுகாது. 'நீ இன்னது நடத்திஞல், நான் இன்னது செய்கிறேன்' என்று பிரார்த்தனை செய்து கொள்வது மிக இழிந்த நிலையாகும். ஆதலால் பிரார்த்தனை செய்து கொள்வது கூடாது என்று குருநாதர் பணித்துள்ளார்.

சட்ட நெறியில் ஒழுகுவதற்கு முன்பு, ஏற்கனவே பிரார்த்தனை செய்து கொண்டிருந்தால், அவற்றை நிறை வேற்றிவிடுமாறும் புதிதாகப் பிரார்த்தனைகள் செய்து கொள்ளாதிருக்குமாறும் கட்டளையிட்டுள்ளனர்.

நோயுற்றவர்களுக்காக அவர்களைச் சேர்ந்த மனைவி, கணவன், தாய், தந்தையர் முதலியவர்கள் அவர்களுக்குத் தெரியாமல் பிரார்த்தனை செய்தாலும் குற்றம் நோயுற்றவர்களையே சேரும். பிரார்த்தனையை நிறைவேற்றிஞல்தான் குற்றம் நீங்கும்.

## அருள் நிட்டை

நாள்தோறும் இறைவன் திருவருளை வேண்டி, வேறு எந்த எண்ணமும் இன்றி, அமைதியாக அமர்ந்து, அருள் நிட்டைபேணி, ஆனந்தம் எய்தப் பழக வேண்டும் எனக் குருபெருமான் அருளியுள்ளார்.

இருட்படலம் விலகவும், ஞானஒளி வளரவும், இன்ப நிலை மேவவும், பொருள் நலமும் அருள்நலமும் புவியின் மிசையெய்தவும், புனித நிட்டை துணைபுரியும் என்றனர்.

ஒவ்வொரு நாளும் அதிகாலை நீராடி முடிந்ததுமோ, இரவில் துயில் கொள்வதற்கு முன்போ, உடையவன் திருவடியை உள்ளத்து உன்னிக் கண்மூடிச் செயல் அடங்கி, அமர்ந்திருந்தால் எவ்வுயிர்க்கும் நலம் பயக்கும் இறைவனருள் பயனளிக்கும். முத்தியெனும் பிறவிப் பயன் பெறும் வழி இதுவே என்றூர் சுவாமிகள்.

நிட்டையமரும் அடியார்கள் நிலமீது உட்காராமல், பலகையின் மீதோ, ஓலைத்தடுக்கின் மீதோ, துணி மடிப்பின் மீதோ அமர்ந்து நிட்டை புரிதல் வேண்டும். அவ்வா றின்றி நிலத்தில் அமர்ந்து நிட்டை புரிந்தால், உடலில் உள்ள காந்த சக்தி நிலத்திற்குச் சென்று விடுமென உணர்தல் வேண்டும். ஆனால் இயலாதவர்கள் எப்படியும் அமரலாம்.

நிட்டையமரும் இத்தருணமே இறைவனிடத்தில் வேண்டுவன வேண்டுதற்குத் தக்க தருணமாகும். சட்டத்தை அனுட்டிக்கும் போது, உறும் இடர்கள், இயலாமைகள், வாழ்க்கையில் எய்தும் குறைகள், முதலிய வற்றை இறைவனிடம் முறையிட்டு, வழி காட்டுமாறு கோரலாம்.

இரண்டு மணி நேரம் நிட்டையமர்தல் வேண்டுமென குருபெருமான் அருளியுள்ளனர். முதலில் அதிற் கால் பங்கு நேரம் இனிதே அமர்ந்து நிட்டை புரிய முயல வேண்டும். நாளுக்கு நாள் நேரத்தைக் கூட்டி வர வேண்டும். எப்போதும் இடைவிடாது நிட்டையில் நிலைத்தல் உயர்முத்தி நிலையாகும்.

நிட்டையில் நிலைப்பதால், சக்தி வீணாகாமல காக்க லாம். சக்தி மிகவும் வளரும்; நிறையும் அதனால் பிணி நீங்கும். தீராத பல பிணிகளை நிட்டைமூலம் தீர்க்க முடியும் என்று இன்றைய விஞ்ஞானிகளும் கண்டுள்ளனர். உடம்பு தூய்மையுறும். சித்திபல எய்தும். இறைவ னிடம் நேயம் கூடும். அருள்ஞானம் வளர்ச்சியுறும். ஆனந்த நிலை வாய்க்கும் என சுவாமிகள் அருளியுள்ளனர்.

## உடல் பொருள் ஆவி ஒப்படைத்தல்

"**சட்டம்**" என்றால் என்ன? ஒரே ஒரு வார்த்தை தான்; உடல் பொருள் ஆவி அனைத்தும் உனக்கே அர்ப்பணம் என உடையவன் திருவடியில் ஒப்படைக்க வேண்டும்; அவ்வளவுதான்' என அண்ணலார் கூறுவர். அவ்வார்த்தையைக் கேட்கும்போது மிக எளிதாய்த்

தோன்றும். எல்லாப் பெருமையும் அதன் கண் உளது எனும் உண்மை அருட்சட்ட வாழ்வினிற் பின்னரே விளங்கும்.

இறைவன், உயிர்கள் உய்யும் பொருட்டு உலக மெல்லாம் உண்டாக்கி, உயிர்களுக்கு உடம்பு கொடுத்து, கருவி காரணங்கள் யாவும் கொடுத்து, ஒவ்வோர் அணுவுள்ளும் கலந்து நின்று, உயர்வுறுமாறு ஊக்கிப் புனிதமாக்கி வளர்த்துக் காத்து, எச்செயலும் செய்விக் கின்றான். மடம்படும் உயிரை முத்தி நிலைக்கு உயர்த்து கின்றான். ஆதலால், உடம்பு பொருள் உயிர் அனைத்தும் இறைவனுக்கே உரியனவாகும்.

இந்த உண்மையை உணராதவர்கள் வினைப் பொதியைச் சுமக்கின்றனர். இவ்வுண்மையை உணர்ந்து அனைத்தையும் இறைவனிடம் ஒப்புவிப்போர் வினைநீங்கிப் பொலிவார்கள். மடமையற்று, ஞானமுற்று, துன்பமற்று, இன்பமயமாய் விள்ங்குவார்கள்.

அவர்கள் 'எனக்கொன்றும் வேண்டாம் நின்பத மல்லாமல் வேறு' என்ற இதயத்தோடும், எண்ணம் மொழி, செயல் அனைத்தையும் இறைவன் அருளில் தோய்வித்து, பிறப்பு இறப்பைக் கடந்த பெருநிலையில் நிலைத்து, நினைப்பினில் நீங்காத அவன் செய்நன்றி யாவும் நினைந்து நினைந்து உருகிய வண்ணம் திகழ்வார்கள்.

எவ்வுயிர் பாலும் இரங்கும் கருணை மயமாகி, எவ்வுயிர்க்கும் உறுதுயர் தவிர்க்கும் இதயமுள்ளோராய், எவ்வுயிர்க்கும் நல்லனவே செய்ய இனிதெண்ணும் நாட்ட முள்ளோராய், எவ்வுயரும் இன்பமுற எஞ்ஞான்றும் தவம் செய்வோராய் இலங்குவார்கள்.

உடல் பொருள் ஆவியை இறைவற்கு ஒப்புவித்தல் சட்டம் என உரைத்தார் 'அண்ணல்; உடல் பொருள் ஆவியை இறைவற்கு ஒப்புவித்தேன் என உரைத்துத் தொடங்குதல் சட்டம்; உடல் பொருள் ஆவியை இறைவற்கு ஒப்புவிக்கும் செயலை நிறைவேற்றல் சட்டம்; உடல் பொருள் ஆவியை முழுதும் ஒப்படைத்த போது சட்டம் முழுமையாகும்.

# சமாதி

இறைவன் ஆக்கிய உடலைத் தீயிட்டுச் சிதைத்தல் கூடாது என்பது சுவாமிகளின் கட்டளை; மண்மறைவு செய்யவேண்டும் என்பதே கருத்து. மண்மறைவு செய்யும் பழக்கம் இல்லாத குடும்பத்தில் தோன்றியவர் சட்ட அடியாராகிப் பின் அடக்கமாகும் சமயத்தில் சமாதி செய்தல் வேண்டும். அவரது குடும்பத்தவரோ, ஊரார் உறவினரோ தடை கூறின் சட்ட அடியவர்கள் உடனிருந்து குருநாதரின் கருத்தை விளக்கிச் சமாதி செய்ய ஆவனபுரிந்து உதவ வேண்டும்.

தவத்திற்சிறந்த அடியார்கள் திருமேனிக்குள்ளே உயிர் அடங்கி விளங்கும். அவர்களை அடக்கம் செய்யும் இடத்தில் உலக மக்களின் துயரைத்தவிர்க்கும் தவக் கனலும், சுடர்விட்டு ஓங்கும் மெய்ஞானப் பொலிவும் சூழ்ந்து எல்லா உயிர்க்கும் இகபர நலங்களை ஊட்டிப் பேணும். பயன்மிக நல்கும். எனவே அத்தூய திருமேனியை எரித்தல் மிகப் பாவமாகும். இவ்வுண்மையை உணர்த்தவே சுவாமிகள் சமாதியை வற்புறுத்தினர். இரெட்டியப் பட்டியில் அமைந்துள்ள ஆண்டவர் திருக்கோயிலும் பிள்ளையார் குப்பத்தில் ஸ்ரீ அருட்சக்தி அன்னை அவர்கள் திருக்கோயிலும் இதற்குச் சான்று களாக அமைந்து விளங்குகின்றன.

ஆண்டவர் அருட்சட்டத்தில் இருப்பவர்கள் யாராவது இயற்கையாக அடங்கிவிட்டால் கற்பூரம் ஏற்றிக் காண்பித்து இந்த ஆத்மா பரம்பொருளாகிய இறை ஜோதியுடன் கலக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்ய வேண்டும்.

பின்னர் ஒருபெஞ்சிலோ, நாற்காலியிலோ, அல்லது மணைப்பலகையிலோ கைகால்களை மடக்கி உட்கார வைக்க வேண்டும். பின்புறம் கழுத்துச்சாய வொட்டாமல் சுவரிலோ, தூணிலோ, சாய்த்துக்கட்டி வைக்க வேண்டும். எவரும் அழுதல் கூடாது. ஆண்டவர் அருட்பாடல் களையும் மற்ற பக்திப்பாடல்களையும் விடாமல் பாட வேண்டும். ஒரு பூமாலைசாத்தி, ஊதுவத்தி ஏற்றி வைக்க

வேண்டும். சமாதி செய்யும் வரை உடலின் கீழ் பனிக்கட்டி (ஐஸ்) வைத்திருக்க வேண்டும்.

## அடக்கம் செய்ய வேண்டிய ஏற்பாடுகள்

சமாதிக்குழி, உள்கூடு, அகலம் 3 அடி, நீளம் 3 அடி ஆழம் 6 அடி, தரையில் செங்கல் பரப்பிய பிறகு ஆழம் 6 அடி இருக்க வேண்டும். சமாதிக்குழி மேடான இடத்தில் இருந்தால் ஆழத்தை ஒரு அடி கூட்டிக்கொள்ள வேண்டும்.

வெளிக் கூட்டின் அகலம் 4½', நீளம் 4½' இருக்க வேண்டும். முக்கால் அடிச்சுவர் இல்லாமல் ஒருகல் சுவர் 4½'' சுவர் இருந்தால் அகலம் 3¾' நீளம் 3¾' போதும் கனமான சரீரமாயின் வெளி அளவு 5'×5' இருக்கலாம்.

## அபிடேக சாமான்கள் எல்லாம் சேகரித்துக் கொள்ளவும்

### சாமான்கள் விவரம்

| | |
|---|---|
| உப்பு | — 2 மூட்டை |
| செங்கல் பொடி | — 3 மூட்டை |
| விபூதி | — ½ மூட்டை அல்லது ஒரு மூட்டை |
| ¾' சுவருக்கு செங்கல் | — 1000 |
| 4½'' சுவரானுல் செங்கல் | — 750 |
| மேலே ஒட்டும் கல் | — 500 |
| சிமெண்ட் | — 2 மூட்டை |
| சிமெண்ட் கலக்க மணல் | — 10 மூட்டை |

செங்கல் பொடி குறைந்தால் உப்பு அதிகமாக்கலாம். கற்பூரம் போடலாம்.

ஆண்களாயின் வெள்ளைத் துணி. பெண்களுக்கு கரையில்லாத சிவப்புத் துணி. குழியில், அடியில், இரண்டு கல் முறை பரப்பவும். பிறகு மேலே கூறியபடி சுற்றுச் சுவர் கட்டவும். அடியில் உப்பு கொஞ்சம் போடவும்.

குழியில் இறக்கியதும் உருவத்தைச் சுற்றி விபூதி, உப்பு, மணல், செங்கற் பொடி ஆகிய இவை முறையாக ஒன்றைச் சுற்றிலும் ஒன்று அமையும்படி கவனத்தோடு இட்டு குழியை நிரப்பவேண்டும். கழுத்துக்குமேல் தலைமறையும் வரை விபூதியை நிறைய கொட்டி சிரசிற்கு மேல் ஒரு ஜாண் உயரம்வரை விபூதி இட்டு பிறகு முறையே உப்பு, மணல், செங்கல்தூள் இவைகளை முறைப்படி நிரப்பி குழியை மூடவேண்டும். விபூதியை எல்லோரும் போட லாம். அடக்கமானவர் மூக்குக் கண்ணாடி அணிபவராயின் சமாதி செய்விக்கு முன் கண்ணாடியை கழற்றி விட வேண்டும். மேல் மட்டம் வந்ததும் கண்டிக்கல் இரண்டு வரிசை ஒட்டவும். கருங்கல் கிடைத்தால் போட்டு மூடலாம். மையத்தில் அடையாளத்திற்காக ஒரு குச்சு வைக்கலாம். மேடையை உயரமாக்கி மையத்தில் ஒரு கோடு போடவும்.

சமாதி செய்விக்கு முன், உரியவரோ அல்லது வேறு உறவினரோ அபிடேகம் செய்து, புதிய வஸ்திரம் கட்டி, பூமாலை போடவும். சமாதிக்கு கொண்டுபோகத் தேர்போல் மலர்களால் கட்டலாம். பாண்டு, மேளம் ஏற்பாடு செய்ய லாம். வசதிப்படி செய்யலாம், கட்டாயமில்லை. சமாதியில் வைத்து முடியும் வரை ஆண்டவர் அருட்பாடல்களைப் பாராயணம் செய்வது அவசியம்.

மறு நாள் காலை அபிடேக சாமான்களுடன் சென்று களி மண்ணால் வாழைப் பூப்போல செய்து ஒரு செங்கல மேல் மைய அடையாளம் வைத்துள்ள இடத்தில் வைத்து அபிடேகம் செய்யவும். இறுதியில் பால் அபிடேகம் செய்யவும். மலர் சாத்தி, தேங்காய், பழம் வைத்து ஆராதனை செய்யவும். இரண்டாம் நாள் முதல் பதினோராம் நாள் வரை தினமும் காலை அன்ன நைவேத்தியம் செய்வது அவசியம்.

பதினோராம் நாள் சிறப்பான அபிடேகம் செய்து, சர்க்கரைப் பொங்கல், வடை, தேங்காய், பழம் வைத்து நைவேத்தியம் செய்யவும். 45 ம் நாள் மண்டல பூசை செய்ய வேண்டும். அதற்குள் கருங்கல்லால் ஒரு வாழைப் பூப்போல் செய்து முன்னர் களிமண் வாழைப் பூ வைத்த

இடத்தில் மேடை கட்டி அதில் வைத்து மேலே வளைவு அல்லது கோபுரம் போல் கட்டவும்.

தவருமல் தினம் எப்போதும் பூசை செய்ய வசதி உள்ளவர்கள் மட்டும் அந்த இடத்தில் விநாயகர் திருவுருவை முறைப்படி வைத்துப் பூசை செய்யலாம். மண்டல பூசை சிறப்பாகச் செய்ய வேண்டும்.

பிராமணர்களும், சட்ட நெறியில் உள்ளவர்களானுல் சமாதி செய்விப்பதுதான் நலம். ஆனுல் அவர்கள் ஒரு நாற்காலியில் வைத்துக் கழியைக் கட்டித் தூக்கிப் போகலாம். தேர்கட்ட வேண்டிய அவசியமில்லை. மேளம் தாளம் எதுவும் வேண்டாம். சமாதி பூசை பதினேராவது நாள் செய்யவும். 45 வது நாள் மண்டல பூசை செய்வது அவசியம். மற்றவை எல்லாம் மேலே கூறியபடி அப்படியே செய்யவும். சமாதி கட்ட வசதி இல்லாதவர்கள் கள்ளிப் பெட்டி அல்லது ஏதாவது ஒரு பெட்டி 3'க்கு3' செய்து அதில் இறக்கி நிறைய உப்பைக் கொட்டி மேலே பலகையை அடித்து மூடி, ஒரு வண்டியில் ஏற்றிக் கொண்டுபோய்க் குழியில் இறக்கி மண்ணைப் போட்டு மூடி விடலாம். சக்திக்கு ஏற்ருற் போல் மற்றவை எவையும் செய்யலாம்.

சமாதிக்கு ஆராதனை செய்யும்போதெல்லாம் அந்த அன்னத்தில் காக்கைக்குக் கொஞ்சம் போடவேண்டும்.

## சட்டம் மீறினுல் தண்டனை

கருணையே உருவான நம் குருநாதர், நாம் கடைத்தேறும் பொருட்டு, நம் செயல்களை நன்கு கவனித்து, நாம ஏதேனும் தவறு செய்தால், நம்மைத் திருத்துவதற்காகத் தண்டனை தந்து, அருள் புரிந்து வழி காட்டுகிருர்.

சட்ட நெறிகளில் கூறியவற்றைத் தெரிந்தோ, தெரியாமலோ, தவறி நடந்தால், அதற்காக வேறுகாரணம் எதுவும் இல்லாமல், திடீரென்று கை கால்களை அசைக்க முடியாமலோ அல்லது வீக்கம் உண்டாகியோ, திடீரென்று ஜுரம் வந்தோ, தண்டனை ஏற்படும்.

மற்றவகையில் வரும் நோய்கள் இலேசாக ஆரம்பித்து படிப்படியாக அதிகமாகும். சட்டம் தவறுவதற்கு தரும்

தண்டனை அப்படியன்று, திடீரென்று முதலிலேயே கடுமையாக இருக்கும். உடனே, 'ஏன் இப்படி நோய் வந்தது' என்று ஆண்டவரை வேண்டினால் குற்றம் நடந்தது நம் நினைவிற்கு அவர் அருளால் தோன்றும்.

குற்றத்தை உணர்ந்து, மன்னிப்புக் கேட்டு, அதற்காக விநாயகரைப் பதினொரு முறை மூன்று வேளை வலம் வருவதாகக் கூறி, இனி அம்மாதிரிக் குற்றங்களைச் செய்யவில்லை என்று மன்னிப்புக் கேட்டதும், நோய் உடனே, அந்த நிமிடமே, நீங்கி விடும். கருணாமூர்த்தியான ஆண்டவர் இப்படி 'ம்மை அருளால் திருத்தி நல் வழிப்படுத்துகிறார்.

ஆண்டவர் சட்டத்தில் சேர்ந்தவர்கள், காப்பியானாலும், காலையில் நீராடிய பின்னரே அருந்த வேண்டும். வெளியூர் பயணம் செய்யும்போது சூழ்நிலை காரணமாக ஒருநாள் முழுவதும் குளிக்க முடியாவிட்டால் அன்று முழுவதும் ஏதும் உண்ணக் கூடாது. குழந்தைகளாயின் மன்னிப்பு உண்டு. அதற்கு வைராக்கியம் தேவை. ஒரு நாள் உண்ணாவிட்டால் மனிதன் இறந்து விடமாட்டான். அன்று, முழுவதும் மனம் ஆண்டவரிடத்தில் அதிகம் ஈடுபடும்.

சைவம், அசைவம் இரண்டும் கலந்த ஓட்டலில் சாப்பிடுவது குற்றம். தனியாகச் சைவர்கள் ஓட்டலில் தான் சாப்பிடவேண்டும். இல்லையேல் ரொட்டி, பிஸ்கட், பழம் முதலியன ஏதாவது வாங்கிச் சாப்பிடலாம்.

ஒரே ஜாதியில் சைவ உணவு அசைவ உணவு கொள்பவர்கள் இருக்கிறார்கள். அப்படிப்பட்ட ஜாதியில் ஒருவர் அருட்சட்டம் ஏற்றவராக இருந்தால், அவர் மற்ற உறவினர்கள் அசைவர்களாயின், நமக்குத் தனியாக உணவு படைத்தாலும் அவர்கள் வீட்டில் உண்ணக் கூடாது. தெரியாமல் உண்டு விட்டால் உடனே, நாம் சட்டம் எடுக்குமுன் இருந்து நீங்கிய வியாதி அன்று வரும். அதாவது எடுத்துக்காட்டாக தலைவலி, மார்புவலி, மூல உபத்திரவம் இப்படி ஏதாவது திடீரென்று தோன்றும்: குற்றத்தை நினைத்து மன்னிப்புக் கேட்டால் நீங்கும்.

வாய்வுக்காக உஷ்ணத்திற்காக என்று தனியே பண்டம் எதையும் சாப்பிடுவது குற்றமே. நமக்குப் பிடித்த

சமானதென்று அன்றுட உணவில் சேர்த்துக் கொள்ளக் கூடியவற்றையே சாப்பிடவேண்டும்.

இஞ்சி, மிளகு முதலியன சமையலில் சேர்த்துக் கொள்ளலாம். ஆனுல் தனியாகக் கஷாயம் செய்து பருகுவதோ பத்துப் போடுவதோ கூடாது. சுக்கை எக் காரணங் கொண்டும் எதற்கும் உபயோகிக்கக் கூடாது. தேன உபயோகிக்கலாம. ஆனுல் சர்க்கரையில் குழைத்தோ தயிரில் ஊற்றியோ சாப்பிடக் கூடாது. சாப்பிட்டால் குற்றம்.

பனை மரத்திலிருந்து கிடைக்கும் நுங்கு, பனம்பழம், பனங்கிழங்கு, பனங்கற்கண்டு எதுவும் சாப்பிடக் கூடாது. ஆரம்பநிலையில் ஏதேனும் தவறு செய்தாலும் ஆண்டவர் மன்னித்தருளுவார். ஆனுல் தீவிரமான அடியார்கள் தவறு செய்தால் உடனே தண்டனை கிடைக்கும்.

சட்டத்தில் தீவிரமாக நடந்து மாதக் கணக்கில் உபவாசம் எடுத்தவர்கள் மிகவும் கண்டிப்பாக வைராக்கிய மாக நடக்கவேண்டும். அவர்களுக்குத் தண்டனை அதிகம். அதிக உயரம் ஏறியவன் கீழே விழுந்தால் அடி அதிகமாகிக் கை, கால் முறியும். அதேபோல் சட்டத்தில் மேல்நிலையில் உள்ளவர் தவறினுல் தண்டனை கடுமையாகும்.

சிலருக்குச் சட்டத்தில் சேர்ந்த பிறகு காப்பி குடித்தால் வாந்தி உண்டாகும். அவர் உடனே காப்பி குடிப்பதை நிறுத்திவிட வேண்டும். ஒரு சிலருக்குக் காலில் செருப்பு அணிந்தால் புண் உண்டாகும். அல்லது அணியவேண்டா மென்று தோன்றும். அதன்பின் அவர் செருப்பு அணியக் கூடாது.

இவை சட்டத்தில் உறுதி மிகுந்தவர்களுக்குத் தான். முக்கியமான வேலைகளுக்குப் புறப்படும்போது ஏதாவது தடைநேர்ந்தால் அக்காரியத்திற்குச் செல்லக் கூடாது. ஆண்டவர் தடுக்கிருர் என்று அறியவேண்டும்.

நாம் செய்யும் தவறை அறிந்து தண்டனை தரும் ஆண்டவர், நடக்கும் நல்லநெறிகளுக்கும், வைராக்கியத் திற்கும், அருள்பாலித்து நம்மைமேல் நிலைக்கு உயர்த்துவார்

என்பது உறுதி. நாம் மறந்தாலும் நம்மை அவர் மறக்க வில்லை. நம்மைக் கவனிக்கின்றார் என்று அறிந்து மேலும் சட்டநெறிகளை ஒழுங்காகக் கடைப்பிடிக்க வேண்டும்.

## சட்ட அடியார்களுக்குச் சில பொதுவான கருத்துகள்

சட்ட அடியாரகள் வெளியில் புறப்படும்போது கையில் விபூதிப பொட்டலம் கொண்டு போக வேண்டும். அதைத்தவற விடக்கூடாது. புறப்படும்போது ஆண்ட வரிடம் சொல்லிக் கொண்டு புறப்பட வேண்டும். நாம் போகும் காரியத்தை அவரிடம் கூறி அனுமதி பெற்றுப் பின் புறப்பட்டால்தான் அக்காரியம் நன்கு முடியும்.

ஒரு சமயம் ஏதாவது தடை நேர்ந்தால், எதையாவது மறந்து விட்டுப் போகின்றோம் என்று அறியலாம். அல்லது அந்த காரியம் நடவாது என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

தடை என்பது எப்படி நேரும்? கால் தடுக்கும் குழந்தைகள் 'எங்கே போகிறீர்கள் நானும் வருகிறேன்' என்று அழும். இவை போன்றவை தடைகள் ஆகும்.

நம்மைப் பெற்ற தாய் தந்தையரை விட கோடி மடங்கு கருணை உள்ளவர் நம் ஆண்டவர். "சிந்தை குடியிருந்தே காக்கும் கோமான்" என்று கூறியபடி, ஆண்டவர் நம் முள்ளேயே இருந்து எப்போதும் எல்லாச் செயல்களையும் கவனிக்கிறார். அவரறியாமல் ஒன்றும் செய்யமுடியாது. பேச முடியாது, சாப்பிட முடியாது,

நமக்குத் தேவையானவற்றை நாம் அவரிடம் கேட்டால் தான் கிடைக்கும். அவர் அருள் இன்னும் நமக்குக் கிட்டவில்லையே என்று சில சமயம் ஏங்கி இருக்க நேரும். அவர் நினைவாகவே இருந்து உண்பதையும், உறங்குவதையும் மறந்து தனியிடத்தில் நினைத்து, நினைத்துத் தேம்பித் தேம்பி அழவேண்டும். இந்நிலை மிக உயர்ந்த நிலையாகும். இதுவே அருள் வேண்ட ஆரம்ப நிலையாகும்.

நம் குருநாதரையும், கடவுளையும் இகழ்ந்து பேசுபவர்களிடம் கோபங் கொள்ளாமல் இறைவனின் பெருமைகளைக் கூறி அவர்களைக் கூறி திருத்த முயல வேண்டும். அவர்கள் ஏற்றுக் கொள்ளாமல் மேலும் குறைவாகப் பேசினுல் நாம் அந்த இடத்தை விட்டு விலகி விடவேண்டும்.

சட்டத்தில் உள்ளவர்கள் நீதி மன்றங்களுக்குப் போனுல் அனுகூலம் ஏற்படாது. ஆண்டவரிடம் அடிக்கடி நம்பிக்கையோடு தாக்கல் செய்து வந்தால் போதும். எல்லோரும் வியக்கும் வண்ணம் வழக்கு நன்முறையில் முடியும்.

பகைவர் நம்மை நீதிமன்றத்திற்கு அழைத்தால் நடந்த உண்மைகளையே கூறவேண்டும். வழக்கறிஞர் பொய் சொல்லச் சொன்னுலும் நாம் சொல்லக் கூடாது. இல்லையேல் தோல்விதான் ஏற்படும்.

அருட்சட்டத்தில் உள்ள அடியார்கள் எதற்கும் கோபப்படாமல் இருக்கவேண்டும். எல்லோரிடமும் பொறுமையாக இருந்தால் எல்லாம் நன்மையாக நடக்கும். ஆத்திரம், அதிகாரம் இவற்றை விட்டு விட்டு, அன்பு காட்டினுல் நமக்கு மற்றவர் இரண்டு பங்கு அன்பு காட்டுவார்கள். தாழ்ந்த இனத்தவர் என்ருே, அறிவற்றவர் என்ருே மற்றவர்களைக் குறைவாக எண்ணக்கூடாது. அவர்களுக்குள்ளும் ஆண்டவர் இருக்கிருர் என்று நாம் அன்பு காட்ட வேண்டும்.

எல்லா உயிர்களிடத்திலும் கருணை கொண்டு அன்பு செய்ய வேண்டும். அங்கும் ஆண்டவரைக் காண வேண்டும் பிற உயிர்களின் துன்பங்கண்டு இரக்கப்பட வேண்டும்.

"எல்லா உயிர்களையும் ஈசனென்றே உன்னடிமை
பல்காலும் போற்றிப் பணிந்தேன் பராபரமே",

என்று நம்குருநாதர் அருளியுள்ளார். சுவாமிகளே அவ்வாறு

அருளியுள்ளார் என்ருல் நாம் எவ்வாறு போற்ற வேண்டும் என்று உணர வேண்டும்.

ஆண்டவர் அருள் பெற அன்பு, ஆகாரக் கட்டுப்பாடு (விரதம்) வைராக்யம், நிட்டை இவை, இன்றியமையாதவையாகும்.

பிறர்க்கொருவன் கொடுப்பதெல்லாம் தனக்கே கொடுத்துக் கொள்கிருன். "கொடுத்தது நமக்கு இருப்பது பிறர்க்கு" என்பது பழமொழி.

இவ்வுண்மையை அறிந்து நாம் வறியவர்களுக்கு உதவ வேண்டும். தரும காரியங்களைச் செய்ய வேண்டும். அதுவே நமக்கு வழித்துணையாகும். நமக்குக் கிடைத்திருக்கும் செல்வத்தில் நாம் ஏழை மக்களுக்கு என்ன உதவி. செய்கின்ருேம் என்பதை ஆண்டவர் பார்த்துக் கொண்டே இருக்கிருர்.

உலகிற் பிறந்தவர்கள் பெற வேண்டிய மாபெரும் பேறு குருபெருமான் திருவருளேயாகும். பூர்வபுண்ணியம் உடையவர்கட்கே அருட்சட்டம் ஏற்று அருள்வாழ் வாற்றும் நல்வாய்ப்பு கிடைக்கும். அருட்சட்ட மேற்று வாழும். அடியவர்கள் ஆண்டவர் திருவருளால் இம்மை மறுமையாகிய எல்லா நலனும் எய்தப் பெற்று இனிது வாழ வேண்டுமெனப் பிரார்த்திப்போமாக.



## ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் அருள்மொழிகள்

அருவுரு வாகிய திருவடி தேடிடு மனமே.

* * *

பாசமெனுந் திரையால் மறைந்திடும்
ஆசை யெனும் கடலே கடந்திடு.

* * *

கனகா பீடமதில் நின்று நடித்திடும்
கரிமா முகனடி சென்று துதித்திடு.

* * *

குருவைக் கண்டடி பணிந் தேத்துவாய்;
இருவினை பற்றுது உனைவிட்டுப் போகும்;
ஏகசற் குணம் முற்றி உனை நற்றியே விடாது;
அருள் கனி வாகும்.

* * *

நாடி யிருக்கும் அடியார் தமக்கவன்
நாட்டத்தைக் காட்டி நடித்திடுவான்.

* * *

சிந்தை தெளிந்துமே பார்த்தாயானல்
தெரிசனங்கள் தோன்றும்.

* * *

அந்தரத்தில் நடமிடும் தந்திமுகவன்--பதம்
சிந்தனை செய்வாய்; தொடர் பந்தமறுமே—நாளும்
அனலில் மெழுகது போல் உருமி நிற்பாய்.

* * *

தொண்டர்பணி செய்பவர்கள் சூட்சாதி சூட்சமெல்லாம்
கண்டு தெளிவாரடி—ஏகுயிலே.
காணாத காட்சியெல்லாம்.

* * *

நிருவிகற்ப சமாதி பெற்றிடும்
அடியர் பொற்பதமே பிடித்திடு
நிட்டைநிலே பூரணம தாகுமே—முன்
விட்டகுறை தானே வந்து சேருமே.

* * *

வேதங்கள் பொய்யாமோ விதித்த
விதிகளும் பொய்யாமோ
சாதனம் உள்ளவர்க்கு அருள் தந்த
சாட்சியும் போதாதோ.

* * *

உன்னைப் படைத்தவன் ஆரு?
உனக்குள்ளே இருக்கிறன் பாரு.
சொன்ன படியே நீ தேரு
சிற்சொரூப நிலையை நீ சாரு.

* * *

மனமே பெறு துணிவே பெற
க்ஷணமாகிலுங் குணமோடிரு
வானமு தத்தினை மகிழ்வாய்—உண்ணும்
தேனமு தத்தினைத் தெளிவாய்.

* * *

பந்தமு மற்றுப் பணியற்றுச் சற்குரு
பாதத்தைப் போற்றிடு சேயே

* * *

பலகாலமும் நிலையாகவே சலனுதிகள் விலகாதிரு
பஞ்சப் பொறிபுலன் அடங்கும்—மாயா
வஞ்சப் பிறவிகள் ஒடுங்கும்.

* * *

பாசக் கயிறே நித்தியம வீசித் திரிவார்களொடு
பக்ஷம் மறந்திடு மயிலே—அருள்
இச்சை சுரந்திடும் குயிலே.

* * *



## எச்சரிக்கை

அருட்சட்டத் திருவிளக்கு எனும் இந் நூலில் உள்ள ஒவ்வொரு விஷயத்தையும் நம்பிக்கையோடும், வைராக்கியத்தோடும் கடைப்பிடித்து, எல்லாம் வல்ல எந்தை குருநாதர் திருவருளால் நன்மை அடைந்தவுடன், ஆனந்த மேலீட்டால், பிறரிடம் கூறிவிடக்கூடாது. ரகசியமாக உள்ளத்துட் கொண்டு போற்றவேண்டும்.

நமக்கு ஏற்படும் ஒவ்வொரு துன்பமு[illegible] நம்முடைய வைராக்கியத்தைச் சோதிப்ப[illegible]தற்கே வருவதாகும். ஆதலால் வைராக்கியத்தைக் கைவிடாது, திருவருள் துணையால் வாழ்வாற்ற வேண்டும்.

மூவேந்த[illegible], [illegible]4